# சிவசங்கரியின் புதினங்களில் பெண்கள்

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (பிஎச்.டி)
பட்டத்திற்குப் பகுதிநிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

ச.சிவசங்கரி

(பதிவு எண்:0342)

நெறியாளர்

பேராசிரியர் வெ.திருவேணி






தமிழ்த்துறை
அழகப்பா பல்கலைக்கழகம்
(தேசிய தர நிர்ணயக்குழுவின் மறுதர மதிப்பீட்டிலும் 'ஏ' தகுதி பெற்றது)
காரைக்குடி - 630 003
தமிழ்நாடு, இந்தியா


மார்ச் - 2016

**பேரா. வே. திருவேணி**
**உதவிப் பேராசிரியை**
**தமிழ்த்துறை**
**தொலைநிலைக் கல்வி இயக்ககம்**
**அழகப்பா பல்கலைக்கழகம்**
**காரைக்குடி -630 003**

# நெறியாளர் சான்றிதழ்

**"சிவசங்கரியின் புதினங்களில் பெண்கள்"** என்னும் தலைப்பில் ச.சிவசங்கரி அவர்கள் தமிழ்முனைவர் (Ph.D) பட்டத்திற்காகச் செய்த இந்த ஆய்வு, அழகப்பா பல்கலைக்கழகத் தமிழத்துறையில் அவர் ஆய்வு செய்த காலத்தில் தன்னியலாகச் செய்யப்பெற்றது என்றும், இதற்கு முன் இந்த ஆய்வின் மீது வேறு எந்தப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப் பெறவில்லை என்றும் சான்றளிக்கின்றேன்.

**நாள்:** **(வெ. திருவேணி )**

**இடம் : காரைக்குடி** **நெறியாளர்**

**ச. சிவசங்கரி**
**பதிவு எண்:0342**
**முனைவர் பட்ட ஆய்வாளர்**
**தமிழ்த்துறை**
**அழகப்பா பல்கலைக்கழகம்**
**காரைக்குடி -630 003**

## ஆய்வாளர் உறுதிமொழி

**“சிவசங்கரியின் புதினங்களில் பெண்கள்”** என்னும் தலைப்பில் தமிழ்முனைவர் (Ph.D) பட்டத்திற்காக எழுதப்பெற்ற இவ்ஆய்வு எனது சொந்த முயற்சியில் உருவானது என்றும், இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ்வாய்வேடு அளிக்கப்பெறவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

**நாள் :** **ஆய்வாளர்**

**கையொப்பம்**

**இடம்: காரைக்குடி** **( ச.சிவசங்கரி )**

**உறுதிக் கையொப்பம்**

# நன்றியுரை

“**சிவசங்கரி புதினங்களில் பெண்கள்**” என்னும் தலைப்பில் முனைவர்பட்ட ஆய்வு மேற்கொள்ள அனுமதி வழங்கிய அழகப்பா பல்கலைக்கழகத் **துணைவேந்தர், பதிவாளர்** ஆகியோர்க்கு முதற்கண் என் நன்றியினை உரித்தாக்குகிறேன்.

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழத் துறையில் முனைவர் பட்ட ஆய்வினை நிகழ்த்துவதற்கு எனக்கு வாய்ப்பளித்த தமிழத்துறைத் தலைவர் **பேரா.முனைவர் மு.பாண்டி** அவர்கட்கு என் நன்றிகள்.

அழகப்பா பல்கலைக்கழகத் தொலை நிலைக்கல்வி இயக்ககம் **முனைவர் வெ.திருவேணி** அவர்கள் எனது நெறியாளாராக இருந்து என்னைப் பலவகையில் நல்லாற்றுப்படுத்தியும், ஆய்வேடு முழுமை பெறப் பல வழிகளில் நல்லாற்றுப்படுத்தியும், ஆய்வேடு முழுமைபெறப் பல கருத்துக்களை வழங்கியும் ஆய்வு செம்மைபெற எனக்கு உறுதுணையாக இருந்ததற்கு என் நன்றிகள். ஆய்வுக்காலத்தில் ஆக்கமும் ஊக்கமும் வழங்கி உற்சாகப்படுத்திய பேராசிரியர்கள் **ச.இராஜாராம், செ.செந்தமிழ்ப்பாவை, மு.நடேசன்,** ஆகியோருக்கு என் நன்றிகள்.

ஆய்விற்கு வேண்டிய தரவுகளைச் சேகரிக்கப் பல நூல்களைத் தந்து ஆய்வு செழுமை பெற உறுதுணையாக இருந்த **ஐயா பழனி இராகுலதாசன்** அவர்களுக்கு என் நன்றிகள்.

எனக்கு உறுதுணையாகவும் உந்துதலாகவும் இருந்து ஆய்வினை உரிய நேரத்தில் முடிக்க உறுதுணைபுரிந்த என் கணவர் **சு.கண்ணதாசன்** அவர்களுக்கு நன்றிகளை பாதங்களில் சமர்ப்பிக்கிறேன்.

இவ்வாய்வேடு இனிதே நிறைவடைய எனது இரு கண்களாக இருந்த என் அருமைத் தோழி **த.புனிதவதி** அவர்களுக்கும் மனம் நெகிழ்ந்த நன்றிகள் பல.

இவ் ஆய்வினை உரிய நேரத்தில் கணினி அச்சு செய்து கொடுத்த **கலா மேடம்** மற்றும் **காரைக்குடி K.V.S பிரிண்டர்ஸ்** அவர்களுக்கும் என் நன்றியினை உரித்தாக்குகிறேன்.

**ச. சிவசங்கரி**

# பொருளடக்கம்

# முன்னுரை

தமிழ் காலத்திற்கேற்பப் புதிய வடிவங்களைப் பெற்றுச் சிறப்புடன் திகழ்கிறது. பத்தொன்பதாம் நூற்றாண்டில் தோன்றி வளர்ந்து வரும் இலக்கிய வகைகளுள் நாவலும் ஒன்றாகும். இயல்பான வாழ்க்கைக்குக் கலை வடிவம் அமைக்கும்போது பலவகையான வடிவங்கள் தோன்றி வளர்ந்து கொண்டே வருகின்றன. தொல்காப்பியர் காலம் தொடங்கி இக்காலம் வரை தமிழில் பல்வேறு வகையான இலக்கிய வகைகளும் வடிவங்களும் தோன்றியுள்ளன. இரண்டாயிரமாண்டு பாரம்பரியம் மிக்க தமிழ் இலக்கிய உலகம் பரந்து விரிந்து அவ்விலக்கியங்கள் பற்றிய ஆராய்ச்சிகளும் பல்கிப் பெருகி வருகின்றன. சங்க காலம் போன்றே எண்ணிக்கை அளவில் எண்ணற்ற படைப்பாளிகள் இந்நூற்றாண்டில் தோன்றியுள்ளனர். தற்காலத்தே தோன்றி இணையற்ற இலக்கியமாக விளங்குவது உரைநடை இலக்கியமாகும் அவற்றுள் புதினமும் சிறுகதையும் முதன்மை இடம் பெறுவன ஆகும். அத்தகைய சீர்மிகு புதினம் என்னும் வடிவம் உருவத்தாலும் உள்ளடக்கத்தாலும் உத்திகளாலும் உன்னத நிலையைப் பெறுகின்றன. சிவசங்கரியின் புதினங்களும் சமுதாயத்தில் தமது தரத்தை நிலை நிறுத்தியுள்ளன. சிவசங்கரியின் புதினங்கள் பெண்களைச் சித்திரிக்கும் முறையை ஆய்ந்து காண்பது பெண்கள் பல்லாற்றானும் முதன்மை பெற்று வரும் இக்காலக் கட்டத்தில் மிகவும் தேவையான ஒன்றாகும்.

**ஆய்வுத்தலைப்பு**

சிவசங்கரியின் புதினங்களில் ஒரு வரையறையும் ஓர் எல்லையும் கருதிப் பெண்களை மையமிட்டுத் தலைப்பு அமைக்கப் பெற்றுள்ளது. சமூகத்தில் பெண்களுக்குச் சிறப்பான இடமுண்டு என்பதை அனைவரும் அறிவர். அம்முறையில் புதினங்களில் பெண்களுக்குத் தரப்பெற்ற இடத்தினை மதிப்பிடும் முயற்சியில் “சிவசங்கரி புதினங்களில் பெண்கள்” என்ற தலைப்பு அமைத்துக் கொள்ளப் பெற்றது.

**ஆய்வு நோக்கம்**

இலக்கியங்கள் வாழ்க்கையில் இருந்து பிறப்பன; வாழ்க்கையைப் பிரதிபலிப்பன. வாழ்க்கையோடு தொடர்புடைய மனித மனங்களையும் அவை சந்திக்கும் சிக்கல்களையும் இலக்கியத்தின் வழியே இனங்காண இயலும். இத்தகு முயற்சிக்குப் பிற இலக்கியங்களைவிடப் புதினம் பொருத்தமானதாகிறது. புதினங்களில் பலதரப்பட்ட பல்வேறு பண்புநலன்கள் கொண்ட பெண்கள் பாத்திரங்களாகப் படைக்கப்பட்டுள்ளனர்.

பெண்களைப் பற்றிப் பல்வேறு ஆய்வுகள் பல்வேறு ஆய்வுத் தளங்களில் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. ஒவ்வொரு ஆய்வும் அவற்றில் உள்ள பல்வேறு சிறப்புக் கூறுகளை எடுத்துக்காட்டுவதாக அமையும். இக்கண்ணோட்டத்தில் சிவசங்கரியின் புதினங்களில் இருபத்துமூன்று புதினங்கள் ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்பட்டு அவற்றுள் காணலாகும் பெண்பாத்திரங்களின் நிலைகளை வெளிக்கொணர்வது இவ்வாய்வின் நோக்கமாகும்.

**ஆய்வு முன்னோடிகள்**

1. புதின இலக்கியத்தில் பெண்களைக் கருத்தில் கொண்டு ஆய்வு செய்யும் முயற்சி அண்மைக் காலத்தில் பரவலாக வளர்ச்சி பெற்றதாகக் கருதலாம். இந்நிலைக்குப் பெண்ணியம் குறித்த விழிப்புணர்வு எழுச்சியாக இருந்த நிலையே காரணம் எனத் துணியலாம். இராஜம்கிருஷ்ணன் கல்விப்புல ஆய்வுப் பின்னணி இல்லாமல் பெண்கள் பற்றிக் காலந்தோறும் பெண்கள் என்ற நூலை எழுதியுள்ளார். பெண்ணியச் சிந்தனையும் விழிப்புணர்வும் கொண்ட கட்டுரைகளையும் எழுதியுள்ளார்; கல்விப் பின்புலத்தில் ஆய்வாளர்கள் பெண்களைக் கருத்தில் கொள்ளும் நிலையில் நிகழ்த்திய சில ஆய்வுகளையும் குறிப்பிடலாம்.

2. செல்லத்தாய்பொன்னுத்துரை லட்சுமி நாவல்களில் பெண்களின் பிரச்சனைகளும் உரிமைகளும் என்ற தலைப்பில் அன்னை தெரசா மகளிர் பல்கலைக்கழகத்தில் முனைவர் பட்ட ஆய்வை மேற்கொண்டுள்ளார்.

3. எம்.கமலம் “தமிழ்ப்புதினங்களில் பெண்கள்” என்ற தலைப்பில் சென்னைப் பல்கலைக்கழகத்தில் நிகழ்த்திய ஆய்வு விரிவான களத்தைக் கொண்டுள்ளது.

4. பெண்களை மையமிட்டு வரலாற்று நாவலைத் தொடர்புபடுத்தி ச.முத்துலெட்சுமி என்பவர் சாண்டில்யன் நெடுங்கதைகளில் பெண்கள் என்ற தலைப்பின் வழி மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தில் முனைவர் பட்ட ஆய்வு நிகழ்த்தியுள்ளார்.

5. அழகப்பா பல்கலைக் கழகத்தில் சே.மஞ்சுளவல்லி சிவசங்கரி நாவல்களில் குடும்ப உறவுகள் என்ற தலைப்பில் முனைவர் பட்ட ஆய்வு நிகழ்த்தியுள்ளார். எனினும் சிவசங்கரியின் புதினங்களில்

இடம்பெறும் பெண்களை ஆய்வு செய்யும் இம்முயற்சி புதுமுயற்சியும் தேவையான முயற்சியும் ஆகும்.

**ஆய்வின் கருதுகோள்**

சிவசங்கரி தற்காலப் பெண் படைப்பாளர்களில் குறிப்பிடத் தகுந்தவர் சமூகத்தில் பலதளங்களில் தன்னை ஈடுபடுத்திக் கொண்ட சிவசங்கரி அலுவலக மகளிர், குடும்பப் பெண்கள், போன்றவர்களின் உளவியல் தன்மைகள் மகளிர் எதிர்நோக்கும் பிரச்சனைகளான பாலியல் சிக்கல்கள் பொருளாதாரத் தேவைகள் ஆண்களால் சந்திக்கும் பிரச்சனைகள் போன்றவற்றைத் தமது புதினங்களில் தனித்தன்மையுடன் பதிவு செய்திருக்கிறார் என்பதும் அந்தப் பதிவு ஆராயப் படுதல் வேண்டும் என்பதும் இவ்வாய்வின் கருத்துகோளாகும்.

**ஆய்வு அணுகுமுறைகள்**

ஆய்வுக்குரிய புதினங்களின் உள்ளடக்கக் கூறுகளை வெளிக்கொணரும் நோக்கில் விளக்கவியல் அணுகுமுறையும் புதினங்களில் வெளிப்படும் பெண்கள் நிலைகளைக் கண்டறியப் பெண்ணிய அணுகுமுறையும் சமூகத்தில் பெண்களின் பங்களிப்பு மற்றும் அவர்களின் சமூக மதிப்புகள் போன்றவற்றை நோக்கும் நிலையில் சமூகவியல் அணுகுமுறையும் இவ்வாய்விற்குரிய அணுகுமுறையாக மேற்கொள்ளப்படும்.

**ஆய்வு எல்லை**

1. திரிவேணி சங்கமம்
2. நதியின் வேகத்தோடு
3. 47 நாட்கள்
4. மெள்ள மெள்ள
5. தான் தன் சுகம்
6. வெட்கம் கெட்டவர்கள்
7. விமோசனம்
8. காற்றுள்ள போதே
9. மூக்கணாங்கயிறு
10. திரிசங்கு சொர்க்கம்
11. கப்பல் பறவை
12. கண் கெட்டபிறகு
13. அடிமாடுகள்
14. பாசம்
15. பயிரை மேய்ந்த வேலிகள்
16. ஒரு சிங்கம் முயலாகிறது
17. தீர்வு
18. இதுவும் ஒரு தாஜ்மஹால்

19. பாலங்கள்

20. இனி தொடராது

21. ருசி கண்ட பூனை

22. நெருஞ்சிமுள்

23. அந்த அம்மா ரொம்ப நல்லவங்க

என்ற 23 புதினங்கள் மட்டும் ஆய்வுக்குரிய எல்லைக் களமாகத் தேர்ந்தெடுக்கப்பட்டு ஆய்வு மேற்கொள்ளப்படுகின்றது.

**ஆய்வுப்பகுப்பு**

"சிவசங்கரியின் புதினங்களில் பெண்கள்" என்னும் இவ்வாய்வு முன்னுரை நீங்கலாக ஆறு இயல்களாகப் பகுக்கப்பெற்றுள்ளது.

(1) ஆசிரியர் ஓர் அறிமுகம்

(2) பெண்களும் சமூகமும்

(3) பெண்களும் கல்வியும்

(4) காதலும் மண வாழ்வும்

(5) பெண்களின் பண்பாடு

(6) பெண்களின் முன்னேற்றம்

துணை நூற்பட்டியல்

பின்னிணைப்பு

**முன்னுரை**

இப்பகுதியில் ஆய்வுப் பொருள் அறிமுகம், ஆய்வின் நோக்கம், ஆய்வின் கருதுகோள், ஆய்வு எல்லை, ஆய்வு அணுகுமுறைகள், ஆய்வு முன்னோடிகள், ஆய்வுப் பகுப்பு ஆகியவை விளக்கப்பட்டுள்ளன.

**இயல் ஒன்று - ஆசிரியர் ஓர் அறிமுகம்**

இப்பகுதியில் சிவசங்கரியின் இளமைக்காலம், கல்வி, திருமணம், பணி, குடும்பச்சூழல் இதர ஈடுபாடுகள், படைப்புகள் படைப்புக்கான பின்னணிகள் அவற்றின் சமூக மதிப்புகள் போன்றவற்றை அறிமுகப்படுத்தும் நோக்கில் இவ்வியல் அமையும்.

**இயல் இரண்டு - பெண்களும் சமூகமும்**

பெண்கள் சமூகத்தில் சந்திக்கும் பிரச்சனைகளை இவ்இயல் காட்டுகிறது. பெற்றோர்களால் சுமையாக பெண்பிள்ளை கருதப்படுவது பற்றியும், கல்வியறிவில்லாத பெண்கள் அடிமாடுகள் போல் வாழும் நிலையை பற்றியும் சித்திரித்துக் காட்டுகிறது.

**இயல் மூன்று - பெண்களும் கல்வியும்**

பெண்களுக்குக் கல்வி இன்றியமையாதது என்பதை வலியுறுத்துகிறது. பெண்களின் கல்விக்கு ஏற்படும் தடைகள் பற்றியும் கல்வியினால் பெண்களுக்கு ஏற்படும் நன்மைகள் பற்றியும் எடுத்துக் காட்டுகிறது.

**இயல் நான்கு – காதலும் மணவாழ்வும்:**

பெண்களுக்குக் காதல் தோன்றும் விதம் பற்றி இவ் இயலில் குறிப்பிடுகிறது. இக்காலப் பெண்கள் காதலைவிட பொருளாதாரத்திற்கு கொடுக்கும் சிறப்பிடத்தை எடுத்துக் காட்டுகிறது. கணவன்- மனைவி இருவரும் ஒற்றுமையாக வாழ ஒழுக்கம் ஒன்றே சிறந்த வழி என்பதை எடுத்துக் காட்டுகிறது.

**இயல் ஐந்து – பெண்களின் பண்பாடு**

பெண்களின் மன உறுதியைப் பற்றி குறிப்பிட்டுக் கூறுகிறது. பெண்களில் சிலர் சந்தர்ப்ப சூழ்நிலையால் தங்கள் பெண்மைக்கு இழுக்கு ஏற்பட்டால் உயிரை மாய்த்துக் கொள்வதைப் பற்றி சித்திரித்துக் காட்டுகிறது. வறுமையாலும் அலைபாயும் மனத்தாலும் பெண்களில் சிலர் தவறிழைப்பது பற்றியும் ஆராய்கிறது.

**இயல் ஆறு – பெண்களின் முன்னேற்றம்**

சமுதாயத்தில் பெண்கள் முன்னேறக் கல்வியே உறுதுணை என்பதை எடுத்துரைக்கிறது. சமுதாய மரபுகளால் பெண்களின் முன்னேற்றத்திற்கு ஏற்படும் தடைகள் பற்றியும், அவற்றைப் பெண்கள் கல்வியின் துணை கொண்டு முறியடிப்பது பற்றியும் விளக்குகிறது. கணவன் தவறிழைக்கும் போது அவனைக் குடும்பத்திலிருந்து விலக்கி விடுவதில் தவறில்லை என்பதையும் எடுத்துக் காட்டுகிறது.

**நிறைவுரை**

இறுதியாக முடிவுரைப் பகுதி அமைகிறது. ஒவ்வொரு இயலிலும் இறுதியில் கொடுக்கப்பட்டுள்ள தொகுப்புரையில் இருந்து தேர்ந்தவற்றைத் தொகுத்தளிப்பதாக இப்பகுதி அமைகிறது. ஆய்விற்குப் பயன்படுத்தப் பெற்ற தமிழ் மற்றும் ஆங்கில நூல்கள் இதழ்கள், கட்டுரைகள் துணைநூற்பட்டியலில் அகரவரிசைப்படி கொடுக்கப்பெற்றுள்ளன; தொடர்ந்து பின்னிணைப்பு அமைகின்றது.

# இயல் -1

# ஆசிரியர் ஓர் அறிமுகம்

**"எனக்கு ஒரு எழுத்தளார் ஆகனும் என்ற கனவோ, மோகமோ, வெறியோ இல்லாம நான் எழுத்தாளர் ஆனேன்"**

என்னுடைய எழுத்தை எந்த நோக்கத்தில் எழுதுகிறேன்னு கேட்டா நான் சார்ந்திருக்கிற இந்த சமுதாயத்தை நான் ரொம்ப நேசிக்கிறேன். "என்னைப் பாதிக்கிற விஷயங்களை........ நான் ஆக்கப்பூர்வமாகப் பகிர்ந்துக்க என் எழுத்தை ஒரு கருவியாகப் பயன்படுத்துகிறேன்.[1] இவ்வாறு தன்னுடைய எழுத்துக்களை அறிமுகப்படுத்தக் கொள்ளும் சிவசங்கரியின் புதினங்களை ஆய்வுப் பொருளாக எடுத்துக் கொண்டு அவரது படைப்புக்களின் வாயிலாகப் பலகோணங்களில் பெண்களின் வாழ்நிலை பற்றி ஆராய்வது இவ்வாய்வின் முக்கியக் குறிக்கோளாகும்.

**பிறப்பு**

தமிழகத்தின் தலைநகரம் சென்னை தான். இவர் பிறந்த ஊர், இவருடைய பெற்றோர் திரு.சூர்ய நாராயணன் திருமதி ராஜலெட்சுமி ஆவர்.

**குடும்பச்சூழல்**

"என்னுடைய முதல் ஆண்டிலிருந்து பத்தாவது வயது வரை நாங்கள் திருமலைப் பிள்ளை சாலையில் உள்ள அந்தப் பெரிய பங்களாவில் குடி இருந்தோம். இப்போது இருப்பது போல அல்லாமல் அன்றைய திருமலைப்பிள்ளை சாலை அந்த வட்டாரத்தில் அதிக வீடுகள் இல்லாமல் அத்வானமாக இருக்கும்.

எங்கள் வீட்டுக்கு நாலாபுறம் மைதானம், முன்னால் இருந்த வெட்ட வெளியைக் கடந்து சாலையில் ஏறினால் நேர் எதிராக இருந்தது. காங்கிரஸ் தலைவர் காமராசரின் நினைவு இல்லம்"[2] என்று தன் வீட்டைப் பற்றிக் குறிப்பிடுகின்றனார் திருமதி சிவசங்கரி.

**கண்டிப்பு மிகுந்ததந்தை**

பின்னர் தன்னுடைய தந்தையார் பற்றிக் குறிப்பிடுகிறார். "ஆஜானுபாகு உருவம் கண்களில் வெளிச்சம் போட்ட அவரது சிரிப்பு, தன்னுடைய பழக்க வழக்கங்களில் கண்டிப்பாக இருக்கும் கறார் தன்மை" இவ்வாறு தன் தந்தை பற்றிச் சொல்கிறார்.

**கல்வி**

சிவசங்கரி தன்னுடைய ஆரம்பக் கல்வியை சென்னை தி.நகர் சாரதா வித்யாலயாவிலும் கல்லூரி வாழ்வை எஸ்ஐ.இடி மகளிர் கல்லூரியிலும் படித்து முடித்தார்.

தன்னுடைய கல்லூரி வாழ்வில் ஏற்பட்ட ஒரு சிறு பொறியை நினைவு கூர்கிறார். ‘‘அப்போது எஸ்.ஐ.இ.டி யில் நான் பி.எஸ்.சி விலங்கியல் படித்த காலம். கல்லூரியிலிருந்து வீடு திரும்பிய போது வழக்கம் போல் அப்பா விசாரித்தார். என்னம்மா? எப்படி? என்கிற மாதிரி இருந்தது அப்பாவின் விசாரிப்பு. நான் சொன்னேன். “சிவசங்கரி நீ முதல் வகுப்பில் தேர்ச்சி பெற வேண்டும்” என்று அப்பா சொன்ன போது திணறிப் போனேன். என்னால் எப்படியப்பா முடியும்? என்றேன் உன்னுடைய பேராசிரியர்களுக்கு உன் மீதுள்ள நம்பிக்கையைவிட உனக்கே உன் மீது நம்பிக்கை வேண்டும். அப்படி ஓர் நம்பிக்கை வந்து விட்டால் நீ முதல் வகுப்பில் தேர்ச்சி பெறுவாய்”[3] என்றார் “தன்னம்பிக்கையும் உறுதியும் எற்படுத்திக் கொண்டால் அது தான் வெற்றிக்கு வழி என்று கூறுகிறார். அதனையே இன்று வரை என் வாழ்க்கையில் பின்பற்றி வருகிறேன்” என்றார் சிவசங்கரி.

**இல்லறம்**

திரு.சந்திரசேகர் என்பவரை சிவசங்கரி திருமணம் செய்து கொண்டார். கணவர் விழுப்புரத்தில் ஸ்பன்பைப் கம்பெனி என்ற சிமெண்ட் பைப் தொழிற் சாலையை நடத்தி வந்தார். கதையை மட்டுமல்ல, நான் எது செய்தாலும் எனக்கு உறுதுணையாக இருந்து ஊக்கமும் தூண்டுதலும் அளித்தவர்களுள் கணவர் சிறப்பான இடத்தைப் பெறுகிறார் என்று அவரைப் பற்றிப் பெருமிதமாகக் கூறுகிறார் சிவசங்கரி.

திருமணமான புதிதில் மூன்று வருடங்கள் போபாலிலும் 1970 முதல் 1984 மார்ச் வரை விழுப்புரத்திலும் கணவருடன் இவ்வாழ்வினைத் திறம்பட நடத்தினர். பின்னர் பிற்பகுதியில் அவர் கணவர் நுரையீரல் கோளாறு ஏற்பட்டு இறந்தது சிவசங்கரி அவர்களை மிகவும் பாதித்தது.

**எழுத்தும் வாழ்வும்**

பல நாவல்களை எழுதியும் சிறுகதைகளைப் படைத்தும் உள்ள சிவசங்கரி வாழ்வியல் பற்றிய தம் கருத்துக்களை பல்வேறு சூழ்நிலைகளில் மிகவும் ஆணித்தரமாகக் கூறுவதைக் காணலாம்.

உயர்கல்விப் பட்டம் பெற்றிருந்த நகர்ப்பபுற வாசியான திருமதி சிவசங்கரியிடம் மனித வாழ்க்கைகுறிந்த தெளிந்த பார்வை இருந்திருக்கிறது. ஒரு நூலுக்கு வாழ்த்துரை தரும்போது வாழ்க்கை குறித்த தனது கருத்தை

மிகவும் தெளிவாகப் பதிவு செய்கிறார். ‘‘வாழ்க்கை என்பது மேடு பள்ளங்கள் நிறைந்தது தான், பிரச்சனைகள், இழப்புகள் வலிகள் இல்லாத வாழ்க்கையே கிடையாது முள்ளும் மலரும் சேர்ந்தது தான் ரோஜா. முள்ளுக்குப் பயந்து மலரிடமிருந்து விலகி ஓடினால் ரோஜாவின் அழகை ரசிக்கும் வாய்ப்பை இழந்து விடுவோம். வாழ்க்கையும் அப்படிப்பட்டதுதான். பாதையின் வளையில் என்ன இருக்குமோ என்ற பயத்தில் பயணத்தைத் தொடராமல் நின்று விடுவது வாழ்க்கைக்கு அர்த்தம் கொடுக்காது’’[4] என்று சுட்டிக்காட்டுகிறார். வாழ்க்கை குறித்த அவரது இந்தப் புரிதல்தான் அவரது புதினங்களில் விரிவாகப் பதிவாகியுள்ளது எனலாம்.

**படைப்புச்செய்திகள்**

இவரது புதிய படைப்புகளின் முழுமையான நோக்கம் “பெண் முன்னேற்றம்” என்பதாகும். ‘‘சமுதாயத்தில் பெண்கள் உரிய மதிப்பைப் பெற்றாக வேண்டும், பெண்கள் அனைத்து வகையிலும் விழிப்புணர்ச்சி எய்த வேண்டும், காலத்துக்கு ஏற்ற மாறுதல்களைப் பெண்சமுதாயம் எதிர்கொள்ளவேண்டும்’’[5] என்ற நோக்கில் எழுதுவதாகச் சிவசங்கரி கூறுகிறார்.

**பிறதுறைப் பணிகள்**

சென்னை வானொலியின் செயல்விளக்க கமிட்டியிலும் பாண்டிச்சேரி கலாச்சார இலாக்காவிலும் உயர்மட்டக் குழுவின் உறுப்பினராகப் பொறுப்பேற்றும் செயல்பட்டு வருகிறார்.

போதை மருந்துக்கு அடிமையாகி உள்ளவர்களுக்கு சிகிச்சை அளித்து மறுவாழ்வு பெற உதவும் வகையில் அப்போலோ, மருத்தவமனையில் இயங்கி வரும் “அடாப்ட்” என்ற மையத்தின் ஆலோசனைகள் குழுவின் அங்கத்தினராகவும் உள்ளார்.

## சான்றெண் விளக்கம்

**சிவசங்கரி பேட்டிகள்:**

1. சுபமங்களா –செப்,ப.10

2. மங்கையர் மலர் - நவம்.ப.20

3. கல்கி , நவ.ப.03

4. வாழ்த்துரை, வாழ்க்கை ஒரு கொண்டாட்டம், ப.9 கலைஞன் பதிப்பகம், முதல்பதிப்பு, 2005, சென்னை.

5. வாழ்த்துரை, வாழ்க்கை ஒரு கொண்டாட்டம், ப.9 கலைஞன் பதிப்பகம், முதல்பதிப்பு, 2005, சென்னை.

# இயல் - 2

# பெண்களும் சமூகமும்

**முன்னுரை**

"புதிய சமுதாயத்தை விவரிக்கவும் விளக்கவும் எழுந்த ஓர் இலக்கிய வடிவம் நாவல் என்று கூறுவது மரபு " என்பார் அறிஞர் க.கைலாசபதி[1.] எனவே சமுதாயத்தில் மகளிர் நிலையினைக் குறித்து அறிந்துகொள்ள சிவசங்கரி படைத்த புதினங்கள் வழி ஆராயப்படுவது பொருத்தமாகும். பெண்கள் பெற்றோருக்கு மகளாக உடன் பிறந்தோருக்கு சகோதரியாக, கணவனுக்கு நல்ல மனைவியாக, மாமனார், மாமியாருக்கு மருமகளாக, குழந்தைக்கு அன்னையாக இவ்வாறு பல்வேறு நிலைகளில் சமுதாயத்தில் விளங்குவதைக் காணலாம். இக்காலச் சமுதாய அமைப்பில் பெண்கள் வீட்டில் மட்டுமின்றி வெளியுலகிற்குச் செல்லும் போது பிற பெண்களுடன் ஆண்களுடன் பழக நேரிடுகிறது. அப்போது அவர்கள் வெளி உலகத்தார்க்குத் தோழியாக, உயர்ந்த நட்பிற்குரியவர்களாக விளங்குவதையும் காணலாம். இது கூடுதலான , சற்று விரிவான உறவுநிலை ஆகும்.

**சமுதாயத் தோற்றுவாய்**

சமுதாயத்திற்குத் தோற்றுவாயாக அமைவது பெண்களே. “மனிதப்பிறவியில் பெண் பழமையானவள்: மக்கள் சமூகத்தில் அவளை ஆதிசக்தி என்று அழைப்பார்கள். காரணம் அவள்தான் உயிரைச் சுமந்து அதற்கு உரமும் ஊட்டுபவள்” என்பார் கவிஞர் தாகூர்.[2] பல மனிதர்கள் சேர்ந்து உருவானதே சமூகம் ஆகும். மனிதர் என்ற குழுவில் ஆடவரும், மகளிரும் அடங்குவர். சமூகத்தில் மகளிர் சிறப்பிடம் வகிக்கின்றனர். சமுதாயத்தின் உறுப்பினரான மனிதன் ஆரம்பமாவது பெண்ணிடமிருந்து தான். குடும்பங்கள் பலசேர்ந்து உருவானதுதான் சமுதாயம். குடும்பங்களை உருவாக்கி நல்வழிப்படுத்திச் சீர்தூக்கி விடும் பணி மகளிர்க்குரியதாக அமைகிறது.

இந்தியத் தமிழ்க் குடும்பங்களில், அதன் தொடர்ச்சியாகச் சமுதாயத்தில் ஒரு பெண்ணுக்கு “அவள் ஒரு கிருக லெட்சுமி” என்று புகழ்மொழி சூட்டப்பட்டுள்ளது. இது ஒரு மேலோட்டமான பார்வைக்குப் பாராட்டு உரையாகத் தோன்றினாலும் ஆய்வாளர்கள் இதனைப் பாராட்டு மொழியாகவோ, புகழ் மொழியாகவோ எடுத்துக் கொள்வதில்லை: மாறாக வீட்டுக்குள் ஒரு பெண் மிகவும் தந்திரமாக, ஆணுக்கு அடுத்த நிலையில், அவள் வீட்டுப்பொருள் என்ற கருத்தில்தான் வைக்கப்பட்டுள்ளாள் என்றே

கருதுவார்[3]. ஆக, சமுதாயத்தில் பெண்ணின் இடம் அடுத்த இடமாக அதாவது இரண்டாம் இடமாகவே இருந்து வருகிறது. சிவசங்கரியின் பெண் பாத்திரங்கள் இந்த நிலையைத்தான் உணர்த்துகின்றன.

**சிவசங்கரி புதினத்தில் தந்தையின் நிலைப்பாடுகள்**

குடும்பத்தில் தந்தையின் பாசத்தைப் பெறுபவளாக விளங்குபவள் பெண். எனினும் சில சமயங்களில் பாசத்தைப் பொழிய வேண்டிய தந்தை மகளை வெறுத்தும் ஒதுக்கி விடுவதுண்டு. இதனை சிவசங்கரி தமது ‘‘நதியின் வேகத்தோடு’’ என்னும் புதினத்தில் எடுத்துரைக்கின்றார். தர்மா கல்விகற்க வேண்டும் என்ற ஆர்வத்தால் அம்மாவின் எதிர்ப்புக்கிடையில் வீட்டை விட்டு வெளியேறி விடுகிறாள். தர்மாவின் மீது பாசத்தைக் கொட்டிய தந்தை இராமநாதன் தன் மகள் வீட்டைவிட்டு வெளியேறியதும் அவள் இறந்து விட்டதாகவே கூறி அவளை வெறுத்து விடுகிறார்.

சிறுவயதிலேயே தந்தையின் வெறுப்பிற்குள்ளாகும். ஜேனை சிவசங்கரி தமது ‘‘திரிவேணி சங்கமம்’’ என்னும் புதினத்தில் படைத்துக் காட்டியுள்ளார். குடும்ப கௌரவத்தின் காரணமாக சங்கர் தனக்குப் பிறந்த ஜேனை வெறுக்கிறான். வெளிநாட்டில், அந்நிய நாட்டுப் பெண்ணிடம் தனக்குப் பிறந்த ஜேனை தன்னுடன் அழைத்துவர மறுக்கிறான். அவனுடைய மனைவி அனுவின் கட்டாயத்தினால் பின்னர் சம்மதித்த போதிலும் ‘‘விமானத்தில் வரும்

போதே சங்கர் தீர்மானமாகக் கூறிவிட்டான். கண்டிப்பாக ஜேன் அவர்களுடன் இருக்கக் கூடாது என்று''[4].

**தந்தை செலுத்தும் அடக்குமுறை**

மூன்று பெண்களுக்குத் தந்தையான நடேசன் அடிக்கடி ''மூன்று பெண்களை வச்சிகிட்டு வயித்துல நெருப்பை கட்டிகிட்டு இருக்கிற எனக்குத் தானே சார் என் அவதி தெரியும்''[5] என்று கூறுகிறார். தன்னுடைய பெண்களை பெரும் சுமையாக் கருதுவதோடு மட்டுமல்லாது அவர்கள் மீது ஆதிக்கமும் செலுத்துகிறார். தந்தையின் கொடுமைகளைத் தாங்கிக் கொண்டு அடங்கி வாழும் பெண்களாகச் சிவகாமி, வேணி, ஈஸ்வரி மூவரும் படைக்கப்பட்டுள்ளனர். மூன்று சின்ன வயது திருமணம் ஆகாத பெண்கள் இருக்கும் இடத்தில் ஒரு பேச்சு, சிரிப்பு, துடிப்பு இருப்பதில்லை எல்லாவற்றையும், அனுபவித்துப் போய்விட்டவர்கள் போல் வாழ்கின்றனர். இதனைக் ''காற்றுள்ள போதே'' என்னும் புதினத்தில் காணலாம்.

**பொறுப்பற்ற பெற்றோரால் பாதிப்படையும் பெண்கள்**

மகளைப் பெற்ற தாய் தந்தையர் பொறுப்பற்று விளங்குவதையும் அவர்களால் மகளின் வாழ்வு கருகி விடுவதையும் சிவசங்கரியின் ''விமோசனம்'' என்னும் நாவலில் காணலாம். அம்புலு அறியாப் பருவமாகிய

பத்து வயதிலேயே தன் கணவனை இழந்து விட்டுத் தாய்வீடு வருகிறாள். அவளுடைய தந்தையோ, தாயோ, அவளுடைய எதிர்காலத்தைப் பற்றிச் சிறிதளவேனும் சிந்தித்துப் பார்க்கவில்லை. அவளுக்குக் கல்வி தேவை, நல்வாழ்வு தேவை என்று எண்ணவே இல்லை. தாய் இறந்ததும் அம்புலுவே குடும்பச்சுமை முழுவதும் தன்மேல் ஏற்றுக் கொண்டு மற்றக் குழந்தைகளை ஆளாக்க வேண்டிய நிலையிலிருக்கிறாள். தன் நலத்தைப்பற்றியோ, எதிர்காலத்தைப் பற்றியோ சிந்திக்க அவளுக்கு நேரமில்லை "இப்போதெல்லாம் இருபது வயது சின்னப் பெண்தானே என்று அம்புலுவை யாரும், முக்கியமாக வைத்தியநாதன் நினைப்பதே இல்லை"[6] என்னும் ஆசிரியர் கூற்று அம்புலுவின் நிலையைத் தெளிவாகக் விளக்கிக் காட்டுகிறது.

சிவசங்கரி தமது நாவல்களில் தந்தை – மகள் உறவைப் பற்றித் தெளிவாக எடுத்துரைக்கின்றார். பொதுவாக தந்தை தன்மகளை வெறுத்து ஒதுக்குவதைக் கூறுவதுடன் சுயநலமுள்ள தந்தையாகவும் அவர் விளங்குவதைப் பற்றியும் ஆசிரியர் தெளிவுறுத்துகிறார். பாசமுள்ள தந்தையைப் பற்றி ஆசிரியர் கூறவில்லை. ஆனால் பாசமுள்ள பொறுப்புள்ள மகளைச் சிவசங்கரி படைத்துக் காட்டுகிறார். தாய் தந்தையருக்காகத் தன் வாழ்க்கையையே வெறுமையாக்கிக் கொண்ட மகளைச் சிவசங்கரியின் நாவல்களில் காணமுடிகிறது.

**வளர்ப்புச் சூழலும் காரணம்**

தந்தைக்குப் பிறகு மகளைப் பாதுகாக்கின்ற பொறுப்பிற்குரியவள் தாயே. அன்னையின் ஆதரவில் வளரும் மகள் சில சமயங்களில் தன் குடும்ப நிலையை உணருவதில்லை. கற்பனை உலகில் சஞ்சரித்துக் கொண்டு, உண்மை உலகை மறந்து விடுகிறாள். இதனை ஆசிரியர் ''ருசிகண்ட பூனை'' என்ற புதினத்தில் விளக்கியுள்ளார். தனது தாய் தனக்கெனத் தேர்ந்தெடுத்த மணமகனை மணக்க மறுத்த ரத்னா ''கைநிறைய சம்பளம்னு நீ சொல்லிவிட்டால் ஆச்சா? ஒவ்வொருத்தன் டாக்டர் . . . எஞ்சினியர் . . . . வக்கீல் . . . . என்று படிச்சிட்டு ஆயிரக்கணக்கில் சம்பளம் வந்தும் கூட குடுத்தனம் பண்ண முடியாமல் தவிக்கிறான்''[7] என்று கூறுகின்றாள். அவள் அன்னையும் ரத்னாவின் எண்ணத்தைப் புரிந்து கொள்கின்றாள்.

ரத்னாவின் இந்நிலைக்கு அவள் வளர்ந்த சூழ்நிலையே காரணமாயிருக்கிறது. சிறுவயதில் தந்தையை இழந்த ரத்னா தங்கள் கிராமத்தை விட்டுச் சென்னை நகர் சென்று படிக்க வேண்டிய நிலை ஏற்படுகிறது. அவர்களுடைய குடும்ப நண்பரான செல்வந்தர் நடேசன் வீட்டில் தங்கிப் படிக்கிறாள். அங்கு வசதியான வாழ்க்கையை அனுபவித்துப் பழகிவிட்டு, பெரிய எதிர்பார்ப்புகளை மனத்தில் வளர்த்து விடுகிறாள். குடும்பச் சூழ்நிலையை உணராமல் மிதமிஞ்சிய பெண்ணாக மாறி விடுகிறாள்.

**பெற்றோரின் இயலாத்தன்மை**

சில குடும்பங்களில் பிள்ளைகள் பெற்றோருக்குப் பணிந்து நடப்பதில்லை. அதற்குத் தாய் தந்தையரே காரணமாவதுமுண்டு இந்நிலையை ஆசிரியர் தமது ''கண்கெட்ட பிறகு'' என்னும் நாவலில் சித்திரிக்கின்றார். தனலெட்சுமி தன் மூன்று மகள்களையும் மிகவும் செல்லமாக வளர்க்கின்றாள். அளவுக்கு மீறிய அளவில் அவர்களுக்குச் சலுகைகள் கொடுக்கின்றாள். அன்னையின் அளவுகடந்த அனுசரணையினால் முதல் மகள் பேபி மணமாகியும் தாய் வீட்டிலேயே தங்கி விடுகின்றாள். தனலெட்சுமி தன்னுடைய மகள்-மருமகன் இல்வாழ்க்கையிலேயும் தலையிடுகிறாள். கணவன், மனைவி பூசலில் மகளை உயர்த்தி மருமகனை அலட்சியம் செய்கிறாள். ''யார்கிட்ட தன் கோபத்தை காட்டறதா நினைச்சிகிட்டு இருக்காரு? நீ பேசாம இரு பேபி கண்ணு . . . . . வைக்கிற இடத்துல வைச்சி . . . . பல்லை பிடிங்கிடலாம்''[8] என்று அம்மாவின் துர்போதனையைக் கேட்டுக் கண்ணைக் கட்டிவிட்ட குதிரையாகத் தன் விருப்பப்படியே நடக்கிறாள் பேபி. இறுதியில் மங்கல நாணைக் கழட்டிக் கணவன் முகத்தில் வீசி எறிந்துவிட்டு அம்மா வீடே அடைக்கலம் என்று வந்து விடுகின்றாள். தாய் வளர்க்க வேண்டிய முறையில் தன் மகளை வளர்க்காததால், ஆணவத்தால் மகள் தன் வாழ்க்கையையே வீணாக்கிக் கொள்கிறாள். இவ்வாறு அன்னையின்

கவனக்குறைவால் பிள்ளைகள் உதவாக்கரைகளாகி விடுகின்றனர் என்பது புதினத்தில் எடுத்துக்காட்டப்படுகிறது.

**அளவுக்கு மீறிய அன்பால் வரும் துன்பம்**

சிறுவயதிலேயே அன்புடனும் கண்டிப்புடனும் பிள்ளைகளை வளர்க்க வேண்டும். சிறப்பாகப் பெண்களைக் குடும்பத்திற்கேற்றவர்களாக, பண்புள்ளவர்களாக வளர்ப்பது அன்னையின் பொறுப்பேயாகும். அன்னையின் அளவு கடந்த செல்லத்தால் பெண்கள் சீர்கெட்டு விடுகின்றனர். இதனையும் ஆசிரியர் இப்புதினத்தில் எடுத்துக்காட்டுகிறார். விஜயா பெற்றோரின் சம்மதம் பெறாமல் அவர்களுக்குத் தெரியாமல் வீட்டைவிட்டு வெளியேறி விடுகிறாள். ‘‘என்னை நீங்கள் யாரும் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை. அதனால் என் ஆசை, திறமை எல்லாவற்றையும் நன்கு புரிந்து கொண்ட ஒருவருடன் நான் ஊரை விட்டுப் போகிறேன்’’[9] என்று கடிதம் எழுதி வைத்து விட்டு விஜயா வீட்டை விட்டு வெளியேறுகிறாள்.

குடும்பத்தில் மூன்று பெண்களுமே சீர் கெட்டுப் போவதற்கு அவர்கள் அன்னை தனலெட்சுமியே காரணமாகிறாள். பிள்ளைகளை வளர்ப்பதற்குப் பாசம் மட்டும் போதாது கண்டிப்பும் தேவை. ‘‘இந்த பிள்ளைகளை அப்பா

கண்டிச்சு வளர்த்திருக்கணும் ஆகாசத்துலேருந்து அதிசயமா பிள்ளைங்க எனக்குத் தான் பிறந்திருக்காங்கங்கிற திமிரோட இருந்தால் இன்னிக்கு இந்த அவதிப் பட்டுத்தான் ஆவணும்”[10] என்று மணவாளன் வாயிலாகத் தாய் தன் மகளை எப்படி உருவாக்க வேண்டும் என்பதை ஆசிரியர் வலியுறுத்துகின்றார்.

**தாய் மகள் உறவில் விரிசல்**

தாயும் மகளும் யாரோ போல் வாழ்கின்ற சூழ்நிலையும் வாழ்க்கையில் உருவாகின்றது. பெற்ற அன்னையே சில சந்தர்ப்பங்களில் தன் மகளை வெறுத்து ஒதுக்கிவிட நேர்ந்து விடுகிறது. இந்நிலையைச் சிவசங்கரி தமது

‘கப்பல் பறவை’ என்னும் புதினத்தில் விளக்கி வரைகிறார். தந்தை இறந்த பிறகு சுஜா கல்லூரியில் சேர்ந்து உயர் கல்வி கற்க விரும்புகிறாள். ஆனால் அவள் அன்னையோ அவளைத்தன் அண்ணன் மகனுக்குத் திருமணம் செய்து கொடுக்க முடிவெடுக்கிறாள். எனவே கல்வியைத் தொடர்வதற்குப் பணம் கொடுக்க மறுக்கிறாள். ஆனால் சுஜா துணிவுள்ள பெண்ணாகச் செயல்படுகிறாள். தன் தாயை எதிர்த்து நின்று தன் படிப்பைத் தொடர முடிவெடுக்கிறாள்.

“இது எங்க தாத்தா வழி வந்த சொத்து இதுலே எனக்கும் உரிமை இருக்கு. முரண்டு பண்ணினீங்கன்னா கோர்ட் வரைக்கும் போகக்கூட நாரெடி தெரியுமா?”[11] என்று சுஜா தன் தாயிடம் வாதாடுகிறாள்.

தன்னுடைய உயர்கல்விக்கு உதவாத அன்னையிடம் தன் திருமணத்திற்குச் செலவாகும். இலட்ச ரூபாயில் ஐம்பதினாயிரத்தைத் தரவேண்டுகிறாள். சுஜா படிப்பை முடித்து வேலை கிடைத்ததும் ஐம்பதினாயிரத்தைத் திருப்பிக் கொடுத்து விடுவதாகவும் கூறுகிறாள். சொன்னபடியே தன்படிப்பை முடித்து வேலை கிடைத்ததும் ரூபாய் ஐம்பதினாயிரத்தை தன்னுடைய அன்னைக்கு அனுப்பி வைக்கிறாள். ஆனால் அப்பணம் மீண்டும் சுஜாவுக்கே திருப்பி அனுப்பப் படுகிறது. சுஜாவின் தாய் தன் மகளை முற்றிலுமாக ஒதுக்கி விடுகிறாள்.

காலச் சூழலில் அன்னையர் சிலர் தங்கள் பிள்ளைகள் தவறிழைத்து விட்டால், அதனை மறந்து, மன்னித்து அவர்களை மீண்டும் ஏற்றுக் கொள்வார்கள். ஆனால் சுஜாவின் தாய் அவளை வெறுத்து ஒதுக்கிய பின் எந்தக் காரணத்திற்காகவும் அவளை மீண்டும் ஏற்றுக் கொள்ளவில்லை.

சுஜாவும் மனஉறுதியுடனும், துணிவுடனும் தன் அன்னையைப் பிரிந்து வாழ்ந்து விடுகிறாள். சுஜாவின் மன உணர்வுகளையும், உயர்கல்வி பெற வேண்டும் என்னும் உயர்ந்த நோக்கத்தையும் சுஜாவின் அன்னை புரிந்து

கொள்ளவில்லை. எனவே தான் தன் மகளை வெறுக்கவும், முற்றிலுமாக ஒதுக்கவும் அவளால் முடிகிறது.

### தாயின் கொடுமை

தந்தையின் மறைவிற்குப் பிறகு தாயின் கொடுமைகளை எதிர்நோக்குகின்ற மகள்களையும் இச்சமுதாயத்தில் காண முடிகிறது. அதனைச் சிவசங்கரி தமது பயிரை மேய்ந்த வேலிகள் என்னும் புதினத்தில் எடுத்துக் காட்டுகிறார். கணவன் இறந்தவுடன் காந்தம் விலைமகளாகத் தன் வாழ்க்கையை அமைத்துக் கொள்கிறாள். அவ்வாழ்க்கையே அவளுக்கு எளிதானதாகவும் ஏற்றதாகவும் தென்படுகிறது. வயதுக்கு வந்த தன் மகளையும் அந்த வாழ்க்கையை மேற்கொள்ளும்படி வற்புறுத்துகிறாள். இந்த வற்புறுத்தல் தன் மகள் விமலாவுக்கு கொஞ்சமும் பிடிக்கவில்லை. ‘‘வேலு மாமாகிட்ட நா இனிமே ஆசையா நடந்துக்கனுமாம். அவர் துணை எங்களுக்கு எப்பவும் வேணுமாம். அதோட அவர் குமரப்பன்னு ஒருத்தரை நாலுநாள் கழிச்சி கூட்டிகிட்டு வருவாராம் . . . . அவர்கிட்டயும் . . . அவர்கிட்டயும் . . .”[12] என்று விமலா கூறுவதிலிருந்து காந்தம் அவளை விலைமகளாக்க முயலுகிறாள் என்பது புலனாகிறது. பெற்றதாயே தன் மகளைக் கொஞ்சமும் தயக்கமில்லாமல், வெட்கமில்லாமல் ஒழுக்கங் கெட்ட வாழ்க்கை வாழ்வதற்கு தூண்டுவதையும், வற்புறுத்துவதையும் இந்நாவல் வழி அறியமுடிகிறது.

பொதுவாக அன்னை என்பவள் தன் நல்வாழ்வு சீர்கெட்டு விட்டாலும், தன் மகள் வாழ்வு வாழ வேண்டும் என்று நினைப்பதுண்டு.

அப்படிப் பட்ட அன்னையர் மட்டும் இந்த சமுதாயத்தில் இல்லை, காந்தம் போன்ற அன்னையரும் இச்சமுதாயத்தில் உள்ளனர் என்னும் கருத்தையே ஆசிரியர் தமது நாவலில் எடுத்துரைக்கின்றார்.

**இளைய தலைமுறை**

தற்காலத்தில் இளைய தலைமுறையினர் மிகவும் சுதந்திரமாக வாழ விரும்புகின்றனர். தங்களுக்கு உரியவற்றைத் தாங்களே கவனித்துக் கொள்ள விரும்புகின்றனர். ஈன்றெடுத்த அன்னையெனினும் தங்களுடைய அந்தரங்க வாழ்க்கையில் தலையிடுவதை அவர்கள் விரும்புவதில்லை. இன்றைய சமுதாயத்தில் பன்னிரண்டு வயது ஆவதற்குள்ளாகவே, பெண்களுக்குத் தன்னம்பிக்கையும், சுதந்திரப்போக்கும், வந்து விடுகிறது. இத்தன்மையுடைய இளம் பெண்ணாக அபர்ணாவை ஆசிரியர் தமது ‘பாலங்கள்’ என்னும் நாவலில் அறிமுகப்படுத்துகிறார். ‘‘நீ அம்மாவாக இருக்கலாம். ஆனால் என் அந்தரங்கத்தில் தலையிட உனக்கு உரிமை இல்லை’’[13] என்று அபர்ணாவின் மகள் சிந்துஜா தன் தாயின் சம்மதத்தை கேட்காமலேயே தன் பெயரை ‘‘புல்புல்’’ என்று மாற்றிக் கொள்கிறாள். அபர்ணாவைவிட அவளுடைய மகள் இன்னும் வேறுபட்டவாளகவே

இருக்கிறாள். அபர்ணா தன் அன்னையின் சம்மதத்தை எதிர்பார்க்காமலேயே தன் துணைவனையும் கல்வியையும் தன்

விருப்பப்படி அமைத்துக் கொண்டாளென்றால், அவள் மகள் சிந்துஜா,

பெயரையே தன் விருப்பப்படி மாற்றிக் கொண்டாள். தற்காலத்தில் தாய்-மகள் உறவு என்பது மேலை நாடுகளைப் போன்றே நெருக்கமானதாக இல்லை. அன்பு, பாசம், உறவு போன்றவற்றிற்குச் சரியான மதிப்பளிக்கப் படுவதில்லை. தாய்-மகள் உறவுகூட மேலோட்டமானதாகவே இருக்கிறது. இவற்றைச் சிவசங்கரி தமது 'பாலங்கள்' என்னும் புதினத்தில் விரித்துரைக்கின்றார்.

**சகோதர – சகோதரி உறவு**

ஒரு பெண் பெற்றோருக்கு மகளாக இருப்பது போல உடன் பிறந்தோருக்கு சகோதரியாகவும் இருந்து செயல்பட வேண்டிய நிலையிலிருக்கிறாள். ஆனால் பல சந்தர்ப்பங்களிலும் சகோதரிகளுக் கிடையிலான உறவு அன்பு கொண்டதாகவும் ஒற்றுமையுடையதாகவும் அமைவதில்லை. நல் வாய்ப்புகள் கிடைக்கும் போது அக்கா, தங்கை என்றெல்லாம் சிந்தித்துப் பார்ப்பதில்லை. இதனை ஆசிரியர் 'காற்றுள்ள போதே' என்னும் புதினத்தில் எடுத்துக் காட்டுகிறார்.

சிவகாமியைப் பெண் பார்க்க வந்த குமார் அவள் தங்கை வேணியை விரும்புகிறான். வேணியும் தான் மணக்கவிருந்த செந்திலை விட்டு குமாரை மணக்கச் சம்மதிக்கிறாள். தன் தமக்கையின் வாழ்வு பாதிக்கப்படுவதைப் பற்றிச் சிறிதளவேனும் சிந்தித்துப் பார்க்கவில்லை. ‘‘வாழ்க்கையில் இந்த

மாதிரி சந்தர்ப்பங்கள் அடிக்கடி வராது’’[14] என்று கூறுகிறாள். வாய்ப்புகள் கிடைக்கும் போது அதைப் பயன் படுத்திக் கொள்ள வேண்டும் என்று நினைக்கிறாள். தன் வாழ்க்கை வசதிகள் நிறைந்ததாக இருக்க வேண்டுமென்று எண்ணுகிறாளேயன்றி, தன் சகோதரியின் எதிர் காலத்தைப் பற்றிக் கவலைப்படவில்லை.

**தன்னலத்தால் ஏற்படும் பாதிப்பு**

சகோதரிகளுக்கிடையில் ஒற்றுமை காணப்படாதது மட்டுமின்றி, அக்காளின் வாழ்க்கையையே பறித்துக் கொள்ளும் தங்கையை ஆசிரியர் தமது ‘அடிமாடுகள்’ என்னும் புதினத்தில் காட்டுகிறார். மீனாட்சியின் கணவன் அவள் தங்கை பார்வதியை இரண்டாவது மனைவியாக அடைய விரும்புகிறாள். பார்வதியும் அக்கா கணவனையே திருமணம் செய்ய எண்ணுகிறாள். நடராஜன் மணந்து கொண்டால் மீனாட்சியின் வாழ்க்கை பாழாகி விடுமே என்று அவள் தங்கை சிந்தித்துப் பார்க்க வில்லை. தன் தமைக்கையின் குடும்ப

வாழ்க்கையைப் பறித்துக் கொள்கிறோமே என்ற எண்ணம் சிறிதுமின்றிச் செயல்படுகிறாள்.

திருமணம் முடிந்து நடராஜனுடன் பார்வதி வருவதைக் கண்ணுற்ற மீனாட்சி அதிர்ச்சியுறுகிறாள். ‘‘கூடப்பிறந்த தங்கையாடி. . . . .நீ! என்னை சாகடித்துவிட்டு உனக்கு வாழ்வு ஒரு கேடா?’’[15] என்று சீறுகிறாள். தன்னலப்

போக்கால் சகோதரிகளுக்கிடையே சிக்கல் தோன்றுகிறது. பாலுணர்வே உந்துதலுக்குக் காரணமாகிறது. பார்வதியின் செயலால் மீனாட்சி அடிமாட்டின் நிலையை அடைகிறாள். தன் குழந்தைகளின் எதிர்காலத்தை மனத்திற்கொண்டு எல்லாவற்றையும் பொறுமையாகச் சகித்துக் கொள்கிறாள்.

**பாலியல் உணர்வால் ஏற்படும் சிக்கல்**

தமக்கையின் வாழ்க்கையைச் சீர்குலைக்கும் தங்கையை ‘வெட்கம் கெட்டவர்கள்’ என்னும் புதினத்தில் ஆசிரியர் எடுத்துரைக்கிறார். புவனாவின் கணவன் பெண்களிடம் சலனம் அடைபவன் தன் படிப்பில் கவனம் செலுத்தியதால், புவனா தன் கணவன் துரைசாமியின் விருப்பப்படியெல்லாம், நடக்கமுடியவில்லை. இதனைப் புவனாவின் தங்கை சுந்தரி பயன்படுத்திக் கொள்கிறார்.

சகோதரிகள் ஒருவருக்கொருவர் உதவியாக இல்லாவிட்டாலும், கொடுமைகள் இழைக்காமல் மற்றவர் வாழ்க்கையை வீணடிக்காமல் இருப்பது நலமாகும். ஆனால் பல சந்தர்ப்பங்களிலும் இது அவ்வாறு நடப்பதில்லை தன்னலமும் பாலுணர்வும் சகோதரிகளுக்கிடையில் பிளவையும் பூசலையும் ஏற்படுத்தி வாழ்க்கையை வீணடித்து விடுகிறது. இதனை சிவசங்கரி தமது புதினம் வாயிலாகத் தெளிவாக எடுத்துரைக்கின்றார்

**சகோதர பாசம்**

சகோதர சகோதரி உறவு பொதுவாக பாசமுள்ளதாகவும் ஒற்றுமையுள்ளதாகவும் காணப்படுகிறது. 'தீர்வு' என்னும் நாவலில் பாஸ்கரன் தன் தங்கை பூரணிக்காகவே வாழ்வதாக சிவசங்கரி கூறுகின்றார். திருமணத்தன்றே கணவனை இழந்த பூரணி மீண்டும் கல்வியைத் தொடரத் தன் அண்ணனின் சம்மதத்தைக் கேட்கிறாள். அவள் வாழ்க்கையைப் பாழ் பண்ணிவிட்டதாக ஒரு குற்ற உணர்ச்சி எப்போதும் மனதுக்குள் உறுத்திக் கொண்டே இருக்க, பூரணி விரும்பியதெல்லாம் செய்து விட வேண்டும் என்கிற வெறியால் உந்தப்பட்ட பாஸ்கரன் உடனே சம்மதித்து விடுகிறான்.

தன் தங்கையின் மகிழ்ச்சி தன் மகிழ்ச்சி என்று எண்ணுகிறான் பாஸ்கரன். பூரணி கணவனுடன் சேர்ந்திருக்கின்ற வாழ்க்கையை இழந்து விட்டதால் தன் மனைவியுடன் மகிழ்ச்சியுடன் பேசக் கூட மறுக்கிறாள்.

‘பூரணிக்கு இல்லாத வாழ்க்கை எனக்கும் வேண்டாம்’’[16] என்று பாஸ்கரன் தன் மனைவியிடம் கூறுவதிலிருந்து தங்கையின் மீது அவன் கொண்டுள்ள பாசத்தைப் புரிந்து கொள்ள முடிகிறது.

பூரணி தன்னுடைய அண்ணனின் பேச்சைக் கேட்டு அதிர்ந்து விடுகிறாள். கல்வியை மட்டுமே சிந்தித்துக் கொண்டு மறுமணத்தை வேண்டாமென்று ஒதுக்கியவள் தன் அண்ணனின் மகிழ்ச்சிக்காக மறுமணத்தை ஏற்றுக் கொள்கிறாள். தனக்காக உருகும் அண்ணன் தன் மகிழ்ச்சியைக் கண்டு மீண்டும் மகிழ்வுடன் வாழ்வான் என்று எண்ணுகிறாள். அண்ணனுக்காக தங்கையும், தங்கைக்காக அண்ணனும் வாழ்வதை இப்புதினம் மூலம் ஆசிரியர் எடுத்துக் காட்டுகிறார். கண்டிப்பும் கட்டுப்பாடும் பெற்றுத் தராததை, அன்பும், பாசமும் பெற்றுத் தருவதைத் தெளிவாக எடுத்துரைக்கிறார்.

**முதுமைப் பருவப் பெண்**

தன்னலமிக்க தம்பிகளைப் பற்றியும் அவர்களால் தமக்கையின் வாழ்க்கை பாதிக்கப்படுவதையும் ஆசிரியர் ‘விமோசனம்’ என்னும் புதினத்தில் எடுத்துக் காட்டுகிறார். பத்து வயதிலேயே விதவையான அம்புலு தன் சகோதர சகோதரிகளுக்காக உழைப்பதிலேயே வாழ்நாளைக் கழித்து விடுகிறாள். கடைசியில் தன் தம்பி அம்பிக்குத் தானே தாயாக இருந்து வளர்க்கிறாள். அம்பியும் திருமணத்தன்று ‘‘இவதான் எல்லாம் இவமனசு கோணாம நாம்

என்னிக்கும் நடந்துக்கறது எனக்கு முக்கியம்''[17] என்று புது மனைவியிடம் சொல்கிறான். எனினும் காலப்போக்கில் அவன் குடும்பம் பெரிதானதும், தன் மனைவிக்கும், பிள்ளைகளுக்கும் மட்டுமே முக்கியத்துவம் கொடுக்கிறான். அக்காவின் உழைப்பையும் பணத்தையும் அனுபவித்த ‘‘அவன் முதுமையில் தள்ளாமையில் அக்கா அம்புலுவைப் பாரமாகவே எண்ணுகிறான். தனக்கென்று மனைவி, மக்கள் வந்து விட்டால் மற்ற உறவுகள் வலுவற்று விடும் என்பதை ஆசிரியர் இங்கு குறிப்பிடுகின்றார்.

**தம்பிக்காகத் தன்னை இழந்த பெண்**

சகோதரனுக்காகத் தன் வாழ்க்கையில் பல அவலங்களையும் ஏற்றுக் கொண்டு அவன் முன்னேற்றம் ஒன்றை மட்டுமே மனதில் எண்ணிப் பாடுபடுகிறாள் சகோதரி எனினும் இறுதியில் அவன் நன்றி மறந்தவனாக சுயநலமே உருவாகத் திகழ்கின்றான். இந்நிலையைச் சிவசங்கரியின் ‘தான் தன் சுகம்’ என்ற நாவலில் வாயிலாக அறியலாம்.

சிறுவயதில் பெற்றோரை இழந்த அக்காவும் தம்பியும் பல கொடுமைகளை அனுபவித்துக் கொண்டு அத்தை வீட்டில் வளர்கின்றனர். தனம் படுகின்ற கொடுமைகளைப் பார்த்த பாலு “நா நல்லா இருக்கணும்னு நீ எத்தனை பாடுபடறே? இது எல்லாத்துக்கும் நா என்னிக்கு திரும்ப ஈடுகட்டப் போறேன்''[18] என வருந்துகிறன். தனமும் தன் தம்பியின் கல்விக்காக அவன்

எதிர்கால நல்வாழ்விற்காகத் தன் கற்பை மாமாவிடம் இழந்து ஒரு பிள்ளைக்கும் அன்னையாகிவிடுகின்றாள். தம்பிக்காக வாழ்க்கையில் அவல நிலையடைந்த தனத்துக்காக பாலு கொஞ்சமும் இரக்கப்படவில்லை. தனக்காத்தான் அவள் இந்த அவமானத்தைத் தாங்கிக் கொண்டிருக்கிறாள் என்பதையெல்லாம் அவன் நினைத்துப் பார்க்கவேயில்லை. தன் வாழ்க்கை வசதிகள் நிறைந்ததாக இருக்க வேண்டும் என்று மட்டுமே எண்ணுகிறேன்.

தனத்திற்கு தம்பியின் எண்ணங்கள் புரிந்து விட்டன. இப்போது பாலுவுக்கு பணம் தான் வாழ்க்கையில் முக்கியம். "பந்தம் - பாசம் என்பதெல்லாம் அப்புறம் தான் என்பது விளங்கியது"[19] என்று ஆசிரியர் கூறுவதிலிருந்து தன் சுகம் ஒன்றை மட்டுமே எண்ணுகின்ற தன்னலமுள்ள தம்பியைக் காணமுடிகிறது.

**மனைவி நிலையில் பெண்**

குடும்பம் என்பது கணவன் - மனைவி உறவின் அடிப்படையில் அமைந்துள்ளது. இந்த உறவு திருமணத்தில் தொடங்குகிறது. மணமுறையினாலோ அல்லது இரத்த உறவினாலோ பிணைப்பு ஏற்பட்டு கணவன்- மனைவி இருவரும் சேர்ந்து வசிப்பார்கள். ஒரு பொதுவான பண்பாட்டைத் தங்களுக்குள் கடைபிடித்து வருவார்கள். "குடும்பம் என்பது அறம், சட்டம், பொருளாதாரம், மதம், சமூக உரிமைகள், பாலுறவு

உரிமைகள், கட்டுப்பாடுகள், காதல், கவர்ச்சி, பக்தி ஆகியவற்றில் இணைக்கப்பட்டுள்ளது என்பர். ளாட்லெவிட் சராஸ்”[20] இத்தகைய குடும்ப அமைப்பில் மனைவியே குடும்பத்தின் அடிப்படை நிலையில் இருக்கிறாள் என்று கூறலாம்.

**கருத்தொருமித்த நிலையில் பண்பாடமைந்த வாழ்வில் பெண்**

கணவனின் காரியங்கள் அனைத்திலும் கை கொடுப்பவள் மனைவியே. கல்லானாலும் கணவன், புல்லானாலும் புருஷன் என்று வாழ்கின்ற பெண்களைச் சிவசங்கரி தமது நாவல்களில் படைத்திருக்கின்றார். இத்தகைய பெண்ணாக அகிலாவை ‘மெள்ளமெள்ள’ என்னும் புதினத்தில் காணலாம். கணவன் மனைவியாக வாழ இயலாத ஸ்ரீதரனை அகிலா கணவனாக ஏற்றுக் கொள்கிறாள். வறுமையின் காரணமாக அவள் ஸ்ரீதரனை மணந்து கொண்டாலும் அவன் உடற்குறையை அதாவது நடக்க முடியாமல் சக்கர நாற்காலியிலேயே அமர்ந்திருப்பதை அகிலா ஒருமுறை கூட சுட்டிக்காட்டியதில்லை. அதுமட்டுமில்லாமல் இல்வாழ்க்கைக்கு தகுதியற்ற கணவனையும் மகிழ்ச்சியுடன் கவனிக்கின்றாள். பொறுமையுடன் அவனுக்கு மருத்துவச் சிகிச்சைக்கான உதவிகள் அனைத்தையும் செய்கிறாள். தன்னுடைய விடாமுயற்சியின் பலனால் அவனை அனைவரையும் போல நடக்கவும் செய்து விடுகிறாள். அகிலா நல்ல உள்ளம் படைத்த பெண்ணாக

தன்னலமற்ற மனைவியாக வாழ்கிறாள். "மண்ணில் உயிர் உள்ள ஒரு ஜீவன் அண்ணா. நல்ல மனசு இருக்குண்ணா அந்த நல்ல மனசு தான் இன்னிக்கு இப்படி கம்பீரமா நீ எழுந்து நடமாட உதவி பண்ணிருக்கு"[21] என்று ஆசிரியர் கணவன் நலனுக்காகவே வாழ்ந்த மனைவியாக அகிலாவை அவள் மைத்துனன் வாயிலாக எடுத்துக்காட்டுகிறார்.

**கணவருடன் முரண்படுதல்**

சமுதாயத்தில் கணவனால் கொடுமைப் படுகின்ற மனைவியரைக் காணலாம். பாலங்கள்' என்னும் புதினத்தில் 'சாரு' தன் கணவன் சுரேசின் கொடுமைகளைப் பொறுத்துக் கொள்ள முடியாமல் மணமுறிவு செய்து விடுகிறாள். திருமணத்திற்குப் பின் சுரேசின் நடத்தைகளைக் கண்ணுற்ற அவள் அவனை மாற்றுவதற்கு முயற்சி செய்கிறாள். அன்பில்லாத அவனால் மனைவியைச் சரியாகப் புரிந்து கொள்ள முடியவில்லை. அவள் முன்னிலையிலே வேறொரு பெண்ணுடன் உறவு கொள்கிறாள். இனி மேலும் தாங்கிக் கொள்ள முடியாது என்ற நிலையில் அவன் உறவே வேண்டாம் என்று சாரு வீட்டை விட்டு வெளியேறுகிறாள். கணவனை ஒதுக்கி வைத்து விடுகிறாள். தன் மதிப்பை இழந்து அவள் வாழ ஆயத்தமாக இல்லை.

**பாலியல் சிக்கலின் விளைவு**

சாருவைப் போல புவனாவையும் தன்மானமுள்ள பெண்ணாக ஆசிரியர் படைத்துள்ளார். தன் கணவன் துரைசாமி மைத்துணி சுந்தரியுடன் உறவு கொண்டுள்ளான் என்பதை அறிந்த புவனா தன் கணவனைப் பிரிகிறாள். அலுவலகத்திற்கு வேலைக்குச் சென்று சொந்த உழைப்பிலேயே தன் மகளையும் நன்முறையில் உருவாக்கி, மருத்துவராக்குகிறாள். கல்வியறிவுள்ள பெண்கள் கணவனின் கொடுமைகளை எதிர்த்துப் போராடி தன் வாழ்க்கையைச் சிறந்த முறையில் அமைத்துக் கொள்ள முடிகிறது.

**கல்வியறிவில்லாத பெண்**

கணவனின் கொடுமைகள் எல்லை மீறும்போது வேறுவழியின்றி அதைப் பொறுத்துக் கொண்டு, அடிமாடு போல் வாழ்கின்ற பெண்ணை ஆசிரியர் தமது ‘அடிமாடுகள்’ என்னும் நாவலில் எடுத்துக் காட்டுகிறார். மீனாட்சியின் கணவன் அவள் தங்கை பார்வதியைத் திருமணம் செய்து கொண்டுவந்து விடுகிறான் எனினும் அழுவதைத் தவிர மீனாட்சியால் வேறொன்றும் செய்ய முடியவில்லை. தன் உயிரை மாய்த்துக்கொள்ள எண்ணுகிறாள். ஆனால் தன் குழந்தைகளுக்காக அந்த எண்ணத்தை மாற்றிக் கொள்கிறாள். மீனாட்சி கல்வியறிவு இல்லாதவளாகையால் தன் சொந்த உழைப்பில் அவளால் வாழ முடியவிலலை. “போக்கிடம் இல்லை.

சாகவும் துணிவு இல்லை. இங்கு இருப்பது ஒன்று. தனக்கும் குழந்தைகளுக்கும் இருக்க இடமும், உண்ண உணவும், உடுக்க உடையும் கொடுக்கும் என்பது தெளிவாகப் புரிய அழுது ஓய்ந்து போனவளாய் மெல்ல எழுந்தாள்”[22] என்று மீனாட்சியின் அவல நிலையை ஆசிரியர் நன்கு உணர்த்துகிறார்

**அலட்சியப் போக்குள்ள பெண்**

இல்லற வாழ்வில் கணவனின் உள்ளம் அறிந்து மனைவி நடக்க வேண்டும். அவ்வாறில்லாமல் அவனை அலட்சியப்படுத்தினால் அவனுடைய மனநிம்மதிக்காக வேறொரு பெண்ணை நாடிச் செல்வான். அதனால் குடும்பத்தில் பல சிக்கல்கள் உருவாகும். இதனை ‘நதியின் வேகத்தோடு’ என்னும் புதினத்தில் நாம் காண முடிகினறது. தர்மா அவள் கணவன் முரளியைப் பொருட்படுத்தாமல் வாழ்ந்ததால் அவன் வேறொரு பெண்ணை நாடிச் செல்ல ஆரம்பிக்கிறான். அதையுணர்ந்த தர்மா தன் கணவனின் விருப்பமறிந்து நடக்கின்ற புத்திசாலி மனைவியாக மாறிவிடுகிறாள். “பொண்ணுங்கிறவ நாணல் மாதிரி இருக்கனும் தர்மா. . .ஆத்துல வெள்ளம் வரச்சே வளைஞ்சு கொடுத்து இருந்தால் தான் பொண்ணுக்கு நிம்மதி”[23] என்று தர்மாவின் அம்மா மூலம் ஆசிரியர் ஒரு மனைவி எப்படி வாழ வேண்டும் என்பதை அறிவுறுத்துகின்றார்.

**அடங்கா மனைவி**

குடும்பத்தில் கணவனை மனைவி அலட்சியமாக எண்ணி அடங்காமல் வாழ்வது அவர்களுடைய குழந்தைகளை உதவாக்கரைகாளக்கி விடுகிறது என்பதை ‘கண்கெட்ட பிறகு’ என்னும் நாவல் மூலம் அறிய முடிகிறது. தனலெட்சுமி தன் கணவனிடம் அடிக்கடி சண்டை போட்டுத் தன் விருப்பத்திற்கேற்றவாறே குடும்பம் நடத்துகிறாள். தாய் தந்தையரின் கண்டிப்பில்லாமல் அவர்களுடைய மூன்று பெண்களும் வாழ்க்கையில் நன்முறையில் வாழத் தகுதியற்றவர்களாகி விடுகின்றனர். கணவனிடம் சண்டையிடுவது தவறு அவனுக்கு மரியாதை கொடுக்காமல் நடப்பது கூடாது என்ற நற்பண்பினைத் தன் மகளுக்கு எடுத்துச் சொல்ல முடியாத நிலையிலிருக்கிறாள் தனலெட்சுமி. அவள் தன் கணவனை அலட்சியமாக நடத்தியதால் மூன்று மகள்களும் அடங்காத நிலையில் சீர் கெட்ட நிலையில் வளர்ந்து விடுகின்றனர்.

**மனச்சலனமடைந்த பெண்**

கணவனுக்கு அடங்காத மனைவியைக் காட்டிய ஆசிரியர் கணவனை விட்டுப் பிறிதொரு ஆடவனைத் தேடிச் செல்கின்ற பெண்களையும் தமது நாவல்களில் படைத்துக் காட்டுகிறார். ‘திரிசங்கு சொர்க்கம்’ என்ற நாவலில் கமலி தன் அலுவலகத்திற்கு அடிக்கடி வருகின்ற மனோகருடன் தொடர்பு

கொண்டு தன் கணவனை விட்டுவிட்டு அவனுடன் சென்று விடுகிறாள். நாகரீக பழக்கங்களும், வரம்பு கடந்த கற்பனைகளும், சமூக மரபுக்கு மாறுபட்ட நடவடிக்கைகளும் கமலியின் சிறப்பாக விளங்க வேண்டிய குடும்ப வாழ்வைச் சீரழிந்த வாழ்வாக மாற்றி விடுகின்றன. மனோகருடன் சென்றபின்தான் முரளியின் நற்பண்பும், மனோகரன் தீய குணங்களும் கமலிக்குப் புரிகிறது. ஒரு நல்ல உத்தமமான கணவனுக்கு மனைவியாக வாழ்கின்ற வாய்ப்பை இழந்துவிட்டோமே என்று வருந்துகின்றாள். “அரசனை நம்பி புருஷனையும் கைவிட்டுட்டு திரிசங்கு சொர்க்கமா அந்தரத்துலே எதுக்கும் துப்பு இல்லாம தொங்குறீயேடி”[24] என்று கமலியின் நிலையை அவள் அண்ணியின் வாயிலாக ஆசிரியர் எடுத்துரைக்கின்றார். நல்ல கணவனோடு சேர்ந்து வாழாத மனைவியின் நிலை உண்மையிலேயே வருந்தத்தக்க ஒன்றாகும்.

**இலக்கிய மரபில் பெண்**

கணவன் செய்கின்ற தவறுக்காக அவனை ஒதுக்குகின்ற மனைவியைச் சேக்கிழார் தமது பெரியபுராணத்தில் திருநீலகண்ட நாயனார் புராணத்தில் படைத்துள்ளார். திருநீலகண்ட நாயனார் பரத்தையை நாடிச் சென்றதால் அவனுடைய மனைவி அவரைத் தண்டித்து விடுகிறாள்.

“ஆனதங் கேள்வர் அங்கோர் பரத்தைபால் அணைந்துநண்ண
மனமுள் பொறாது வந்த ஊடலால் மனையின் வாழ்க்கை

ஏனைய எல்லாஞ் செய்தே உடனுறைவிசையா ரானார்"

"தீண்டுவீராயின் எம்மைத்திரு நீலகண்டம் என்றார்"[25]

கணவனுக்கு வேண்டிய பணிகள் அனைத்தையும் முடித்து விட்டுத் தன்னைத் தொடக்கூடாது. இது இறைவன் ஆணை என்றும் கூறிவிடுகிறான். சேக்கிழாரைப் போல சிவசங்கரியும் 'மூக்கணாங்கயிறு' என்னும் நாவலில் கணவனைத் தண்டித்துவிடுகிற மனைவியை அறிமுகப்படுத்துகிறார். சந்திராவின் கணவன் மூர்த்தி பிற பெண்களை நாடிச் செல்கிறான். எனினும் தன் குழந்தைகளின் எதிர்காலத்திற்காகச் சிறிது காலம் பொறுமையாக இருக்கிறாள். அவள் பிள்ளைகள் பெரியவர்களானதும் துணிந்து செயல்படுகிறாள். தன் கணவன் தொடர்பு வைத்துள்ள நளினி என்னும் பெண்ணை மூக்கணாங்கயிறாகப் பயன் படுத்துகிறாள். மூர்த்தியை அடக்க நளினிதான் சரியான பெண் எனத் தீர்மானித்து அவளை அவனுக்கு இரண்டாவது திருமணம் செய்து வைக்கிறாள். தனிக் குடித்தனத்திற்கும் ஏற்பாடு செய்கிறாள். "இப்ப நளினிக்கு நீங்கள் கட்டியிருக்கிற தாலி, அவள் உங்களுக்கு மாட்டியிருக்கிற மூக்கணாங்கயிறு . . . . எங்கிட்ட அடங்காத உங்களை நளினி என்கிற மூக்கணாங்கயிற்றை மாட்டி அடக்கிட்டேன்"[26] என்று கொடுமையிழைத்த கணவனுக்குச் சரியான தண்டனையளிக்கிறார்.

இக்காலச் சமுதாயத்தில் மனைவி என்னும் நிலையிலுள்ள பெண்களை ஆசிரியர் தமது புதினத்தில் படம் பிடித்துக் காட்டுகின்றார். கணவனின் கொடுமைகளை அனுபவித்துக் கொண்டு அமைதியாயிருக்கின்ற

பெண்களையும் கணவனுக்குத் தண்டனையளிக்கின்ற திறமையுள்ள துணிவான மனைவியையும் நாம் சந்திக்கின்றோம். அலைபாயும் மனத்தால் கற்புநிலை தவறிவிடுகின்ற மகளிரையும் ஆசிரியர் எடுத்துரைக்க மறக்கவில்லை என்றே கூறலாம்.

**மருமகள்**

சமுதாயத்தின் அடிப்படைக் கூறாக அமைந்துள்ள குடும்பத்திற்கு மருமகள் தலைமையிடத்திருப்பவள். எனினும் புதிதாகத் திருமணமாகித் தன் வீட்டிற்கு வருகின்ற மருமகளை அந்தக் குடும்பத்தில் ஒருத்தியாக பெரும்பாலான மாமியார்கள் எண்ணுவதில்லை. தன் மகனின் வருமானத்திலிருந்து ஒரு பகுதி அவளுக்கு சேர்ந்து விடுமே என்றும், தன்மகனைத் தன்னிடமிருந்து பிரித்து விடுவாளே என்றும் பொறாமைப்படுகின்ற மாமியார்களையே இன்றைய சமுதாயத்தில் காணமுடிகிறது. மருமகளை மகளாக எண்ண வேண்டிய மாமியார் அவளை வேண்டத்தகாத ஒரு எதிரியாகவே கருதிவிடுகின்றாள்.

‘இனி தொடராது’ என்னும் புதினத்தில் புஷ்பா அவள் புகுந்த வீட்டில் ஒரு அடிமையாகவே நடத்தப்படுகிறாள். அன்போ, ஆசையோ, உதவியோ இல்லாத கணவன், மனிதத்தன்மையே இல்லாத மாமியார் இவர்களிடம் சிக்கித் தவிக்கின்றாள். தன் கணவன் கார்த்திக்குடன் பேசுவதற்குக் கூட அவள் மாமியார் அனுமதிப்பதில்லை. அவன் அம்மாவுக்கு மகனாக வாழ்கிறானேயன்றி, மனைவிக்குக் கணவனாக வாழவேண்டுமென்று நினைக்கவேயில்லை. இவற்றைப் பொறுத்துக் கொள்ள முடியாத அவள் மைத்துனன் அவளுக்கு மறுமணம் செய்து வைக்கப் போவதாகக் கூறுகிறான். சமுதாயத்தில் கொடுமைகளையே அனுபவித்துக் கொண்டிருக்கும் மருமகள் விழித்தெழ வேண்டுமென்பதே ஆசிரியர் விருப்பம். எனவேதான் புஷ்பாவிற்கு மறுமணம் பற்றி எடுத்துரைக்கின்றார்.

மாமியாரின் கொடுமைகளாலும், கணவனின் ஆதரவற்ற தன்மையாலும் மன நோயாளியாகிவிட்ட மருமகளை ஆசிரியர் ‘மெள்ள மெள்ள’ என்னும் நாவலில் படைத்துக் காட்டுகிறார். அகிலா எளிய குடும்பத்திலிருந்து வந்த

மருமகள் என்பதற்காக ஜானகி அவளை வெறுக்கிறாள் தன் மகனிடம் அகிலாவைப் பற்றிப் பழிச்சொல் கூறிக் கொண்டே இருக்கிறாள். தன் மகனுக்கு நல்வாழ்வளித்தவள் தன் மருமகளே என்று சிறிதளவும் சிந்தித்துப் பார்க்க வில்லை. இறுதியில் அகிலா உடல் நலம்குன்றிப் பின்னர் மனநோயாளியாகி விடுகின்றான்.

**தாய்மைப்பேறு**

தாய்ப்பாசம் ஒப்பற்றது. உயர்வானது, ஈடு இணையற்றது. பெண்கள் அனைவரும் தான் தாயாக வேண்டும் தனக்கு ஒரு குழந்தை வேண்டும் என்று எண்ணுவது இயற்கை. தனக்குக் குழந்தைப்பேறு கிடைக்க எண்ணுவது இயற்கை. தனக்குக் குழந்தைப்பேறு கிடைக்க வாய்ப்பில்லா விட்டால், தன் கணவனுக்கு வேறொரு பெண்ணிடம் தோன்றிய குழந்தையை தன் பிள்ளையாகவே எண்ணி அன்பைப் பொழியும் இயல்புடையவள் பெண். இந்நிலையை சிவசங்கரியின் 'திரிவேணி சங்கமம்' என்னும் புதினத்தில் காணலாம்.

தன் கணவன் சங்கருக்கும் மரியாவுக்கும் தோன்றிய 'ஜேன்' என்னும் சிறுமியை தன் மகளாக நினைத்துப் பாசத்துடன் வளர்க்கிறாள் அணு. அந்தஸ்த்தின் காரணமாக சங்கர் ஜேனைப் பிரித்து விடுதியில் படிக்க வைத்தாலும், அவனால் ஜேனை பார்க்காமல் இருக்க முடியவில்லை. அச்சிறுமி தன்னுடனேயே வாழ வேண்டுமென்று அவள் விரும்புகிறாள். ஜேனுக்கு வேண்டிய உடை, மற்ற பொருட்கள் அனைத்தையும் தானே நேரில் சென்று தேர்ந்தெடுத்து வாங்கிக் கொள்கிறார்.

ஒரு பெண் தாய்மை அடைவதைப் பெரும் பேறு என்று உணர்கிறாள். ‘கடந்த சில நாட்களாக அவள் என்னை அம்மா என்றழைக்கும் போது எனக்கு சிலிர்த்துப் போயிற்று சங்கர் உங்க பெண்ணை எனக்குக் ஏன் கொடுத்து நம்ம பெண்ணாக்கிக் கொள்ள கூடாது?”[27] என்று அணு கூறுவதிலிருந்து பாசமுள்ள அன்னையைக் காண முடிகிறது.

**நட்பு நிலையில் பெண்**

தற்காலத்தில் பெண்கள் வீட்டில் முடங்கிக் கிடக்காமல் வெளியில் சென்று காரியங்கள் ஆற்றும் திறன் பெற்றுள்ளவர். எனவே அவர்கள் தன்னையொத்த பெண்களோடு மட்டுமல்லாமல் ஆண்களுடனும் நெருங்கிப்

பழகிச் செயலாற்றும் நிலையிலுள்ளனர். இவ்வாறு பழகும் போது ஆண்களுடனும் நல்ல முறையில் நட்புக் கொண்டு சிறந்து விளங்கமுடிகிறது. இதனைக் ‘கப்பல் பறவை’, ‘பாலங்கள்’ போன்ற புதினங்களில் சிவசங்கரி சித்திரித்துக் காட்டுகின்றார்.

சுஜா தன்னுடன் பணிபுரியும் சங்கரை ஒரு நல்ல நண்பனாக எண்ணிப் பழகுகிறாள். தன் சொந்த வாழ்க்கையில் நடப்பவற்றையெல்லாம் அப்படியே எடுத்துரைக்கின்றாள். தன் அன்பிற்குரிய காதலன் வாசுதேவனைப் பற்றியும், இறுதியில் தன் விருப்பம் நிறைவேறாததைப் பற்றியும் எடுத்துரைக்கின்றாள். மேலும் பணியை விட்டு நின்று விட முடிவு செய்து ஊரை விட்டுப்

போவதற்கான உதவிகளைச் செய்யும் படியும் வேண்டுகிறாள். " நா நினைக்கிறது நடக்க ஒரு நல்ல நண்பனாக இருந்து ஹெல்ப் பண்ணுவியா சங்கர்? என்று வினவுகிறாள். சங்கரும் அதற்கு நான் என்றைக்கும் உனக்கு நல்ல நண்பன்தான் இதில் சந்தேகம் வேண்டாம்"[28] என்று பதிலுரைக்கின்றாள்.

பாலங்கள் என்னும் நாவலில் சாரு தன்னுடன் பணி புரியும் பாஸ்கரனை நல்ல நண்பனாக எண்ணிப் பழகுகிறாள். அவனும் அவளுக்கு உதவிகள் பல புரிந்து நட்பிற்கு இலக்கணமாகத் திகழ்கின்றான். சாரு அவனிடம் தன் குடும்பச் சிக்கல்கள் அத்தனையும் கூறி அதற்கான தீர்வுகளையும் கேட்பது வழக்கம். பதினெட்டு ஆண்டுகளான பின்பும் இருவரும் நல்ல நண்பர்களாக விளங்குகின்றனர். இவ்வாறு ஒரு பெண்ணுடன் சிறந்த நட்புடன் வாழ முடியும். ஒரு நல்ல தோழியாக இருக்க முடியும் என்பதனை ஆசிரியர் எடுத்துக் காட்டுகின்றார்.

பெண்கள் ஆண்களுடன் பழகும் போது அது காதலாகவும் மாறிவிட வாய்ப்புண்டு. அந்நியநாட்டுப் பெண்ணான மரியா இந்தியப் பண்பாட்டின் மீதுள்ள ஈடுபாட்டினால் சங்கருடன் பழக ஆரம்பிக்கின்றாள். அந்தப் பழக்கமே நாளடைவில் காதலாக மாறிவிடுகிறது. அவன் அவளை விரும்பவில்லை என்பதை அறிந்தும். அவள் தன்னை அவனுக்காக அர்ப்பணித்து விடுகிறாள். இவ்வாறு ஆண் - பெண் நட்பு காதலாக மாறவும் வழியுண்டு என்பதை ஆசிரியர் 'திரிவேணி சங்கமம்' என்ற புதினத்தின் மூலம் எடுத்துரைக்கின்றார்.

## முடிவுரை

சமுதாயத்தில் பெண் முக்கியமான ஆனால் சிக்கலான இடத்தை வகிக்கிறாள். அவள் பல நிலைகளிலிருந்து தன் கடமைகளை ஆற்ற வேண்டியவளாகிறாள். தந்தைக்கு மகளாக இருக்கும் போது தந்தையின் வெறுப்புக்களையும், ஆதிக்கத்தையும் எதிர்நோக்க வேண்டிய நிலையிலிருக்கிறாள். பாசமுள்ள மகளைக் காணும் நாம் அந்த அளவிற்குப் பாசமுள்ள தந்தையை சிவசங்கரி புதினத்தில் காணமுடியவில்லை.

பெரும்பாலான புதினங்களில் அறிவிற் சிறந்த ஒழுக்கமுள்ள மகளைக் காட்டிய ஆசிரியர் பொறுப்பற்ற ஒழுக்கக்கேடான அன்னையரையும் எடுத்துக்காட்டுகிறார். பெற்ற மகளைக் கெட்டவழிகளில் புகுத்திய அன்னையரைப் பற்றியும் ஆசிரியர் தமது புதினங்களில் கூறுகின்றார். மகளின் எதிர்காலத்தைப் பற்றிச் சிந்திப்பதைவிட அவளுக்கு மணம் முடித்து தனது சுமையைக் குறைத்துக் கொள்ள எண்ணும் அன்னையரையும் காணமுடிகிறது. புகுந்த வீட்டில் கணவனுக்காகவே வாழும் மனைவியரையும் சிவசங்கரியின் புதினங்களில் பார்க்க முடிகிறது. கணவனின் குறிப்பறிந்து செயலாற்றும் பெண்களையும் சந்திக்க நேர்கின்றது. கணவனின் கொடுமைகளை அனுபவிக்கின்ற மனைவியையும், கணவனை விட்டு வேறு ஒருவனை நாடிச் செல்கின்ற மனைவியரையும் ஆசிரியர் விளக்கியுரைக்கின்றார்.

குடும்பத்தில் மருமகள் அனுபவிக்கின்ற கொடுமைகளை ஆசிரியர் விரிவாக எடுத்துச் சொல்கிறார். ஆனால் அந்த அளவிற்கு மருமகளைக் கொடியவளாகச் சிவசங்கரி சித்திரித்துக் காட்டவில்லை. பெண்கள் குழந்தைகளுக்காக ஏங்கும் நிலையினையும் இங்கே காணமுடிகிறது.

சகோதர – சகோதரிகள் உறவு இங்கு பற்றும், பாசமும் நிறைந்ததாகக் காணப்படவில்லை. மாறாகத் தன்னலமும் குறுகிய மனநிலையும் உடையதாகவே காணப் படுகிறது.

தற்காலத்தில் பெண்கள் குடும்பத்தில் மட்டும் சிறந்து விளங்கவில்லை. வெளியுலகிற்கும் சென்று பல்வேறு நிலைகளில் செயலாற்ற வேண்டியவர்களாயிருக்கின்றனர். அந்நிலையில் அவர்கள் ஆண்களுடன் பழகும் வாய்ப்பினைப் பெறுகின்றனர். ஆண்களுக்கும் உற்ற தோழியாகப் பெண்கள் விளங்குகின்றனர்.

இவ்வாறு பெண்கள் சமுதாயத்தில் பல்வேறு நிலைகளிலிருந்து பல்வேறு சூழ்நிலைகளையும் எதிர்நோக்க வேண்டியுள்ளதால் அவர்களுக்குச் சமுதாயத்தில் தவிர்க்க முடியாத இடம் அளிக்கப்படுகிறது.

## சான்றெண் விளக்கம்

1. க. கைலாசபதி, தமிழ்நாவல் இலக்கியம், ப.285
2. மகாகவி தாகூர், ரவீந்திரர் கட்டுரைத் திரட்டு, முதல் தொகுதி, ப.571.
3. டாக்டர் J.கோதைப்பிள்ளை, Forward, Women and Society, Edited by Nirmala Jeyaraj, lady Doak college, Madurai P.XI.
4. சிவசங்கரி, திரிவேணி சங்கமம். ப. 71
5. சிவசங்கரி, காற்றுள்ளபோதே. ப. 19
6. மேலது, ப. 23
7. சிவசங்கரி, ருசிகண்ட பூனை. ப.39
8. சிவசங்கரி, கண்கெட்ட பிறகு. ப. 41
9. மேலது, ப. 65
10. மேலது, ப. 65
11. சிவசங்கரி, கப்பல் பறவை. ப.50
12. சிவசங்கரி, பயிரை மேய்ந்த வேலிகள். ப.43
13. சிவசங்கரி, பாலங்கள். ப. 230
14. சிவசங்கரி, காற்றுள்ள போதே ப. 92
15. சிவசங்கரி, அடிமாடுகள். ப.62
16. சிவசங்கரி, தீர்வு ப. 43
17. சிவசங்கரி, விமோசனம் ப.39

18. சிவசங்கரி, தான் தன் சுகம். ப.47

19. மேலது, ப. 98

20. சி. இரா. சந்திரன். சிவசங்கரி நாவல்கள் ஒரு மதிப்பீடு ப. 75

21. சிவசங்கரி, மெள்ள மெள்ள ப. 352

22. சிவசங்கரி, அடிமாடுகள். ப.63

23. சிவசங்கரி, நதியின் வேகத்தோடு . ப.79

24. சிவசங்கரி, திரிசங்கு சொர்க்கம். ப.159

25. பெரிய புராணம் திருநீலகண்ட நாயனார் புராணம் சேக்கிழார் ப.50.

26. சிவசங்கரி, மூக்கணாங்கயிறு. ப.111

27. சிவசங்கரி, திரிவேணி சங்கமம். ப.90

28. சிவசங்கரி, கப்பல் பறவை. ப.212

# இயல் - 4

# காதலும் மணவாழ்வும்

**முன்னுரை**

முன்னுரை காதல் என்பதும் மணவாழ்வு என்பதும் மானுட இயல் ஆராய்ச்சியில் உலகப் பொதுவான செய்திகள் என்றே கருதப்படுகின்றன. இவ்விரண்டனுள், 'காதல;" என்பதை அறுதியிட்டு விளக்கிச் சொல்லுதல் இயலாது. ஆனாலும், பாவேந்தர் பாரதிதாசன் " காதல் அடைதல் உயிர் இயற்கை" என்று சொல்கிறார்[1.] தமிழ்த் தென்றல் திரு.வி.க காதலையும் திருமணத்தையும் இணைத்து 'இய்கை அறம்' என்று குறிப்பிட்டுச் சொல்கிறார்.[2] இந்தப் பொருள் பின்னணியுடன் சிவசங்கரியின் புதினங்களில் சித்தரிக்கப்படம் காதல், மணவாழ்வு இவற்றொடு தொடர்புடைய பாத்திரங்கள் சந்திக்கின்ற சிக்கல்கள் குறித்து இவ்வியலில் ஆராயப்படுகிறது. காதலும் மணவாழ்வும் குறித்து இவ்வியலில் ஆராயப்படுகிறது. காதலும் மணவாழ்வும் பாத்திரங்களிடையே பன்முகம் கொண்டு காணப்படுகின்றன என்ற அடிப்படையில் சிவசங்கரியின் புதினங்கள் அமைந்துள்ளன.

**இயல்பான காதலும் அதன் வெற்றியும்**

மணமாகாத ஆண் - பெண் இருவருக்கிடையில் காதல் என்பது இயல்பானது. இதனை மாறிப்புக்கு இதயம் எய்துதல்" எனலாம் அவர்கள்

பழகுவதன் மூலம் அக்காதல் வளர்ந்து திருமணத்தில் முடிகிறது. சில நேரங்களில் தோல்வியடைவதுமுண்டு. பெற்றோரைப் பிரிந்து சொந்தக் காலில் நிற்கும் தர்மாவைச் சந்தித்த முரளி முதல் பார்வையிலேயே அவளை விரும்பி விடுகிறான். இருவரும் நெருங்கிப் பழகுவதற்குப் பல சூழ்நிலைகளை உருவாக்குகிறான். தர்மாவின் உள்ளமும் அவனை நாடிவிடுகிறது. அவளுடைய கனவிலும் " ஆண் பெண்ணை நெருங்கி வந்து அணைத்துச் சிரிக்கிறான். அந்த முகம் திடீரென்று முரளியின் முகமாக மாறுகிறது"[3] இவ்வாறு தர்மாவும் எண்ணத்தால் முரளியை நெருங்கி விடுகிறாள்.

முதலில் பெண்களின் அழகுதான் ஆண்களைக் கவர்ந்திழுக்கின்றது. பின்னர் அவர்களுடன் பழகுவதன் மூலம் ஆழமான காதல் உருவாகிறது. இத்தகைய இயல்பான காதலை ஆசிரியர் "நதியின் வேகத்தோடு" என்னும் புதினத்தில் எடுத்துக் காட்டுகிறார். "நானும் எத்தனையோ பெண்களோடு பழகியிருக்கிறேன். பட் நோபடி லைக்யூ ஜஸ்ட் நோபடி லைக்யூ தர்மா. . . . யூ ஆர் ஸோ ப்யூட்டி. உன் அழகு எனக்கு மயக்கம் தருகிறது. தர்மா . . . . இது ஏன்! உன்னைப் பார்க்காவிட்டால் உன்னோடு பேசாவிட்டால் எனக்குப் பைத்தியம் பிடித்த மாதிரி இருக்கு"[4] என்று முரளி தன் இயல்பான காதலைத் தர்மாவிடம் வெளிப்படுத்துகிறான்.

பத்து நாள் பழக்கத்திலேயே முரளி மேல் தான் கொண்டுள்ளது வெறும் கவர்ச்சி மட்டுமின்றி, அழுத்தமான அன்பு என்பதையும் தர்மா உணர்ந்து விட்டாள். இதனை "முரளிகிட்டே எல்லாம் இருக்கு . . . . அவர் அழகாயிருக்கார் நாகரீகமாய் இருக்கார். . . பணம் இருக்கு. நம்ப ஜாதியைச் சேர்ந்தவர் என்ற ப்ளஸ் பாயிண்டும் இப்போது சேர்ந்திருக்கு. . . . இது எல்லாமா சேர்ந்து அவரை எனக்குப் பிடிக்க வைக்கிறது மங்களா. . ."[5] என்று தர்மா கூறுவதில் இருந்து உணர முடிகிறது. உள்ளமொன்றிய முரளி தர்மாவின் காதல் திருமணத்தில் முடிகின்றது. பரபரப்பும் முரண்பாடுகளும் நிறைந்த உலகில் இப்படியும் ஓர் இயல்பான காதல் வாழ்வும் சமுதாயத்தில் இருக்கத்தான் செய்கிறது என்று உணர்த்துவதற்காகவே சிவசங்கரி படைத்துள்ளார் போலும்.

**பரிதாப உணர்வுக்காதல்**

காதலில் பலவகையுண்டு. ஒருவர் மேல் ஏற்படும் பரிதாபம், அனுதாப உணர்வு இவை கூட நாளடைவில் காதலாக மாற வழியுண்டு இத்தகைய காதல் ஒருவரை ஒருவர் புரிந்து கொண்டு ஒருவரின் வாழ்க்கைச் சூழல் அவரின் மனநிலை இவைகளை அறிந்து கொண்டு ஏற்படுவதால் இக்காதல் இறுதிவரை நிலைத்திருக்கிறது. பல எதிர்பார்ப்புகளை உடைத்தெறிந்து திருமணத்தில் முடிவடைகிறது. இந்நிலையைப் 'பயிரை மேய்ந்த வேலிகள்' என்னும் நாவலில் காண முடிகிறது.

அன்னை இருந்தும் தாயப்பாசத்தை அறியாத விமலாவும், குடியினால் கெட்டு, பொறுப்பற்ற தந்தைக்கு மகனாக இருந்த குருமூர்த்தியும் முதல்முதலில் ஒருவர் மீது ஒருவர் இரக்கம் கொள்கின்றனர். தங்களுடைய குடும்பச் சூழ்நிலையைப் பரிமாறிக் கொண்டு ஒருவருக்கொருவர் ஆறுதல் கூறுகின்றனர். ஒருவரை ஒருவர் நன்கு புரிந்து கொண்டதால் அவர்களுடைய குடும்பச் சூழ்நிலையோ, பெற்றோரின் மனப்போக்கோ அவர்களின் காதலுக்குத் தடையாக முடியவில்லை. முதலில் நண்பர்களாகப் பழகத் தொடங்கியவர்கள், பின்பு காதலர்களாக மாறிவிட்டனர். இக்காதல் இருவரையும் நல்ல கணவன் - மனைவி ஆக்கிவிட்டது. ஒரு நல்ல புருஷன் உன்னைக் காப்பத்த முடியுமென்ற தைரியம் இருக்கு. இதோட ஓர் உத்தமமான மனைவியாகவும் நீ எனக்கு இருப்பாய் என்ற நம்பிக்கை இருக்கு”[6] என்று குருமூர்த்தி கூறுவதிலிருந்து இருவருடைய உள்ளமும் அன்பினால் பிணைக்கப்பட்டதும், ஆழமான காதலாக விளங்கி இறுதியில் கணவன் - மனைவி என்ற உறவை உருவாக்கி விடுகிறது என்பதையும் அறிய முடிகிறது.

**திருமணமானவன் மீது கன்னியின் காதல்**

காதலுக்கு எல்லை வகுக்க முடியாது திருமணமாகாத இருவருக்கிடையில்தான் காதல் தோன்ற வேண்டும் என்பதில்லை. திருமணமான ஓர் ஆடவனிடம் கன்னி மகளிர் காதல் கொள்வதுமுண்டு. அக்காதலுக்குக் காரணங்கள் பல உள.

காதல் என்பது சாதி, மதம், இனம், நாடு, மொழி, வயது இவற்றிற்கு அப்பாற்பட்டது. வயது வரன்முறைக்கு ஏற்றாற்போல் தான் அவ்வுணர்வு ஏற்படும் என்றும் கூறவியலாது. ஒரு பெண் தன் வயதிற்கேற்ற ஒரு ஆடவனைத் தான் விரும்புவாள் என்று கருத முடியாது. தன்னைவிட வயதில் மிகவும் முதிர்ந்த திருமணமான ஆடவனை ஒரு பெண் விரும்பி விட்டால் அவனை எப்படியாவது அடைந்தே தீர வேண்டும் என்று தீவிரமாக இருப்பாள். முறையற்ற வழியிலேனும் அவனை அடைந்துவிட முயற்சிப்பாள். அவனையும் தூண்டி விடுவாள் "நீங்க நிர்மலாவை டிவோர்ஸ் பண்ணிவிட்டு, என்னைக் கல்யாணம் செய்யக்கூடாதா?"[7] என்று சுஜா வாசுதேவனைத் தூண்டுகிறாள்.

சுஜாவுக்குத் தன் வாழ்வும் சுகமும் முக்கியமாகத் தெரிகிறதே தவிர தன்னைப் போல் ஒரு பெண்ணிற்கு எதிரியாகின்றோமே என்ற எண்ணமோ அல்லது வேறொரு பெண்ணிற்குத் துரோகம் செய்கின்றோமே என்ற கவலையோ அவளுக்கு ஏற்படவில்லை. தன் விருப்பத்தை நிறைவேற்றுவதற்காக சமுதாயத்திற்குப் புறம்பான அவலமானதொரு வாழ்க்கையைக் கூட மேற்கொள்ள விழைகிறாள். அதாவது மனைவியாக அல்லாமல் ஆசைக்குரியவளாகக் கூட வாழத்துணிகிறாள்.

"தன்னைவிட வயதில் ரொம்ப மூத்தவர் திருமணமாகி மனைவியுடன் வசிப்பவர் என்ற எந்த நினைவும் எழுந்து பிராண்டாமல் வாசுதேவனை நான் காதலிக்கிறேன் என்ற விபரம் மட்டும் ச்நதோஷமாக மனசை ஆக்கிரமிக்க,

சுஜாவின் உதடுகளில் புன்னகை இடம் பிடித்தது"[8] என்று தற்காலத்து முறை மீறிய காதலையும் எடுத்துக் காட்டுகிறார் ஆசிரியர்.

சுஜா தன்னுடைய நண்பன் சங்கரிடம் தனக்கும் வாசுதேவனுக்கும் இடையில் எழுந்த காதலைப் பற்றி கூறுகிறாள். அவன் ஏன் இவ்வாறு நிகழ்கின்றது என்று கேட்க, அதற்கு, "அவர் ஆண், நான் பெண், காதலிக்கிறது தப்பா?"[9] என்று விவாதம் செய்கிறாள். மேலும் இந்தச் சமுதாயத்தைப் பற்றியும் தனக்குக் கவலையில்லை என்று கூறுகிறாள். காதலைப் பொறுத்த வரையில் இக்காலத்துப் பெண்கள் எதைப் பற்றியும் ஆழமாகச் சிந்திப்பதில்லை என்னும் கருத்தை ஆசிரியர் சிவசங்கரி இந்தப் புதினத்தில் இந்தக் காதல் நிகழ்வுமூலம் எடுத்துரைக்கிறார்.

திருமணமானவர் மீது காதல் கொண்டால் தனக்குத் தகுந்த பாதுகாப்பு கிடைக்குமா என்று பெண்கள் சிந்திப்பதில்லை அவர்களிடம் காதல் உணர்வு ஒன்று மட்டுமே தலைதூக்கி நிற்கிறது. வாசுதேவன் மீது காதல் கொண்ட சுஜாவிடம் அவள் நண்பன் சங்கர் "மனைவியோட வாழற மனுஷன் கிட்ட உனக்கு எப்படி பாதுகாப்பான வாழ்க்கை கிடைக்கும் சுஜா . . .[10] என்று கேட்கிறான். அதற்கு "கிடைச்ச வரைக்கும் போதுமென்ற திருப்தியோட நா இருந்திட்டா"[11] என்று சுஜா பதிலுரைக்கின்றாள். பெண்கள் தாம் காதலித்த ஆண்களை அடைவதில் தீவிரமாகவே இருக்கின்றனர். அக்காதலின் பின்

விளைவுகளைப் பற்றிச் சிந்திப்பதில்லை. தன்னுடைய வாழ்க்கைக்கும் பாதுகாப்பு கிடைக்குமா? என்பதைப் பற்றியே சிந்திப்பதில்லை. இப்படியும் சமுதாயத்தில் காதல் உறவுகள் உள்ளன என்பதை எடுத்துக் காட்டுவதாக இந்தப்புதினமும் பாத்திரமும் உள்ளது. சுஜாவின் இந்த முறையற்ற காதலுக்குக் காரணம் அவளது பொருளாதார ஈட்டம் என்பதை சிவசங்கரி எடுத்துக்காட்டுகிறார்.

இன்றைய சமுதாயத்தில் கல்வி கற்ற பெண்கள் பொருளீட்டுவதால் சார்ந்து வாழ வேண்டும் என்பதில்லை. அத்தகைய பெண் இனத்தைச் சிவசங்கரி தமது நாவலில் எடுத்துக் காட்டுகிறார். 'கப்பல் பறவை' என்னும் நாவலில் சுஜா தன்னம்பிக்கைத் திறம் உடையவள். தானே பொருளீட்டித் தன்னந்தனியாக வாழ்கின்றவள். எனவே திருமணமான வாசுதேவனை எந்தவித எதிர்பார்ப்புகளுமில்லாமல் காதலிக்கிறாள். தனக்கு வாசுதேவனிடம் எதிர்காலத்தில் தகுந்த பாதுகாப்புக் கிடைக்காவிட்டாலும் கிடைத்தது போதும் என்ற துணிவோடு காதல் ஒன்றே முதன்மையானது என்ற உள்ளத்தோடு வாழ்கிறாள். இத்தகைய பெண்ணான சுஜாவுக்கு நெஞ்செல்லாம் பொறாமை அதன் விளைவுதான் இந்த வாழ்க்கை என்பதையும் சிவசங்கரி எடுத்துக்காட்டுகிறார். "கூடவே இப்போதும் இந்த நிமிஷத்திலும் அவர்கள் ஒன்றாக ஒரே அறையில் படுத்திருப்பார்கள் என்ற

நினைப்பு பளிச்சென்று சீற, முதன் முறையாய் சுஜாவின் பொறாமை எட்டிப் பார்த்தது”[12] என்ற வரிகள் மூலம் சுட்டிக்காட்டுகிறார். ஒரு பெண்ணின் உள்ளம் ஒரு ஆடவனின் மீது சரியாகவோ, தவறாகவோ சென்று விட்டால் எந்த நிலையிலும் அவனை விடுவதில்லை , வேறு ஒரு ஆடவனை அவள் நினைத்துப் பார்ப்பதில்லை. இப்படியும் பெண்கள் இருக்கிறார்கள் என்று உணர்த்தவே இந்த சுஜா பாத்திரப்படைப்பு ஆகும்.

**விதவைக் காதல்**

“ஓர் ஆணும் பெண்ணும் பழகும் போது அது போகப்போக காதலாகவும் வளரும்” என்று வ.சுப. மாணிக்கம் கூறுகின்றார். கணவனை இழந்தவர்கள் வாழ்க்கையில் தனக்கு ஒரு துணை வேண்டுமென்பதற்காகப் பிறிதொரு ஆணை விரும்புகின்றனர். விதவைகள் திருமணமான ஒரு ஆடவனை விரும்பும்போது பெரும்பாலும் அக்காதல் வெற்றியடைவதில்லை. ஆனால் மணமாகாத ஒருவனை விரும்பினால் எந்தவிதமான சிக்கலுமில்லாமல் அக்காதல் வெற்றியடைந்து விடுகிறது. இப்படியும் ஒரு சூழல் அமையப்பெற்ற ஒரு விதவையின் காதலைப் பற்றிச் சிவசங்கரி தமது ‘பாலங்கள்’ என்னும் புதினத்தில் கூறுகிறார்.

கணவனை இழந்த அபர்ணா எந்தவிதமான தயக்கமும் இல்லாமல் ‘விமல்’ என்பவனை விரும்புகிறாள். அவனும் அபர்ணாவை விரும்பவே இக்காதல் திருமணத்தில் முடிகின்றது. “விமல் இண்டியன் ஏர்லைன்ஸ் டெல்லி

ஆபிஸோட மேனேஜர் மம்மி . . . . இந்த விபத்து, காம்பன்சேஷன் சம்பந்தமா பேசப் போனப்போ அறிமுகம் ஆச்சு. எட்டு மாசமா பழகுறோம். வீ லவ் ஈச் அதர் வெரிமச். அடுத்தமாசம் நாலாம் தேதி ரிஜிஸ்ட்ரார் ஆபீஸ்ல கல்யாணம் பண்ணிக்க ஏற்பாடு செய்திருக்கோம்"[13] என்று அபர்ணா தன் அன்னையிடம் கூறுகிறாள். தன் கணவன் விபத்தில் இறந்த சிறிது காலத்திலேயே வேறு ஒருவனைக் காதலிக்கும் அபர்ணா நாகரிகத்தில் திளைத்தவள் சொந்தமாகப் பொருளீட்டும் திறம் படைத்தவள். தற்கால சமுதாயத்திற் கேற்றவாறு கணவனை இழந்த அவள் உள்ளம் வேறு ஒருவனை நாடுகிறது. அவருடைய காதலும் வெற்றியடைந்து விடுகிறது.

**ஒருதலைக் காதல்**

ஒருதலைக் காதல் என்பது ஒருபக்க காதல் ஆகும். அதாவது, ஆடவன் விரும்பி அதனைப் பெண் தெரிந்து கொள்ளாமலிருப்பது, அல்லது ஒரு பெண் விரும்பி அதை ஆண் புரிந்து கொள்ளாமலிருப்பது யார் விரும்பினாலும் அவர்கள் தங்கள் அன்பை புலப்படுத்திவிட வேண்டும். அதாவது எடுத்துச் சொல்லிவிட வேண்டும். அப்போது தான் காதல் வெற்றியடையும். அமைதியாக அன்பை விருப்பத்தை வெளிப்படையாக எடுத்து சொல்லாமலிருந்தால் அக்காதல் தோல்வியில் தான் முடியும். இதனை ஆசிரியர் 'இதுவும் ஒரு தாஜ்மஹால்' என்னும் புதினத்தில் எடுத்துரைத்துள்ளார்.

கல்லூரியில் பயிலும் போது குமரேசன் சுமதியைப் பார்த்த முதல் நாளே காதல் கொள்கிறான். ஆனால் இது சுமதிக்குத் தெரியாது. ஆனால் குமரேசனோ எங்கும் சுமதி எதிலும் சுமதியைக் காண்பவனாக இருக்கிறான். இந்நிலையில் அவன் நண்பன் காசி "அவள் கிட்டப் போயி நான் உன்னைக் காதலிக்கிறேன்னு சொல்லனும். அதுவும் இல்லாட்டி மளமளனு காகிதத்தை எடுத்து கச்சிதமா பத்து வரிலே மனசுல உள்ளதை எழுதிக் காட்டிடனும்"[14] என்று அறிவுறுத்துகிறான். ஆனால் குமரேசன் தன் உணர்வினை சுமதியிடம் வெளிக்காட்ட வில்லை. "பிறவிகள் தோறும் தொடர்ந்து வரும் பிணைப்பு என்று சத்தியமாய் நம்பமுடியும்"[15] என்று ஆசிரியர் ஒருதலைக் காதலைப் பற்றிக் கூறுகிறார். இப்படிப்பட்ட ஒரு நிலையை உணர்வை சுமதி தெரிந்து கொள்ள வில்லை.

சுமதியும் இயல்பாக எல்லோரையும் போலவும் தன் குடும்பத்தார் நிச்சயித்த ஒரு மருத்துவரை மணந்து வாழ்க்கை நடத்துகிறாள். குமரேசன் பலமுறை முயன்றும் குடும்பச் சூழ்நிலைகளின் காரணமாக சுமதியைக் கண்டுபிடிக்க முயற்சித்தும் இயலவில்லை. அவள் நினைவாகக் குமரேசன் திருமணம் செய்து கொள்ளாமல் அவளுடன் வாழ்வதற்காக ஒரு பெரிய மாளிகையையும் கட்டுகிறான். முப்பது ஆண்டுகள் கடந்தபின் காசியின் உதவியால் சுமதியைக் கண்டு பிடித்து விடுகிறான். "சுமதிக்கு இன்னொருவர் கணவர் என்கிற நினைப்பு இதயத்தைக் குடைந்தது"[16] என்று ஒரு தலைக்

காதலில் ஏற்பட்ட அதிர்ச்சியை ஆசிரியர் விளக்குகிறார். முப்பது ஆண்டுகளுக்குப் பின்பும் குமரேசன் சுமதியைச் சந்திக்க விரும்பி தன்னை அறிமுகப்படுத்துகிறான். ஆனால் அவளுக்கு குமரேசனை நினைவில்லை. "மன்னிக்கனும் முப்பது ஆண்டு ஆச்சா நினைப்பு இல்லை"[17] மிகவும் இயல்பாக குமரேசனின் வேதனையை அறியாதவளாகக் கூறிவிட்டாள்.

**பணத்துக்காகக் காதல்**

காதலில் ஈடுபடாது எந்தக் குழப்பங்களிலும் சிக்கிக் கொள்ளாத சுமதி போன்ற பெண்களைக் காட்டிய ஆசிரியர், பொருளுக்காகவே தன் தந்தை வயதிலிருக்கிற ஆணின் மீது தனக்குக் காதல் ஏற்பட்டு விட்டதாகக் கூறுகின்ற பெண்களையும் எடுத்துக் காட்டத் தவறவில்லை.

தன்னை எடுத்து வளர்த்த தன் தந்தையின் நண்பரான சிட்டிப்பாபுவைக் காதலிப்பதாக ரத்னா கூறுகிறாள். "நான் சீரியசாகத்தான் பேசறேன் மாமா. . . நான் உங்களைத் தான் காதலிக்கிறேன். உங்களைத்தான் கட்டிக்கவும் போறேன்"[18] என்று பொருளுக்காக அவரை விரும்புவதாகக் கூறுகிறாள். உண்மையான அல்லது ஆழமான அன்பினால்

சிட்டிப்பாபுவை ரத்னா விரும்பவில்லை. இவள் முறையற்ற எண்ணத்திற்காகவே அவர் சந்திரா என்னும் பெண்ணை மணந்து கொள்கிறார். அதன்பின்பும், ரத்னா வேறு ஒரு இளைஞனை மணந்த பின்பும், தன் கணவனிடம் "எல்லாம் சரியாக இருந்திருந்தால் வீடு முழுக்க என்னதாகத்தான் இருந்திருக்கும்"[19] என்கிறாள்.

மேலும் எனக்கு குடுக்க மாட்டேன்னிட்டு யாரையோ கூட்டிக்கிட்டு வந்திருக்கீங்க"[20] என்று சிட்டிப்பாபுவிடம் கூறுகிறாள். அவரைக் காதலிப்பதாகச் சொன்னது அவருக்காக இல்லை அவருடைய பணத்துக்காகத்தான் ரத்னாவிற்கு சிட்டிப்பாபுவிடம் பிடித்தவை அவருடைய வீடு வாகனம் வசதி இவைகள் தாம்; தான் அவரைத் திருமணம் செய்து கொண்டால் அத்தனையும் தனக்கே கிடைக்கும் என்கிற எதிர்பார்ப்பில் தான் சிட்டிப்பாபுவைக் காதலிப்பதாகச் சொல்லியிருக்கிறாள். காதல் என்கிற பெயரில் இவ்வுலகத்து வாழ்க்கை வசதிகளை அனுபவிக்கத் துடிக்கின்ற பெண்கள் மிகப் பலரை இச்சமுதாயத்தில் காணலாம். அப்பெண்களின் பிரதிபலிப்பாக ரத்னாவை ஆசிரியர் படைத்துள்ளார். நடுத்தரக் குடும்பத்தில் பிறந்த பெண்கள் பலர் வாழ்க்கை வசதிகளைப் பெற இயலாத நிலையிலுள்ளனர். கார், பங்களா என்பதெல்லாம் அவர்களுக்கு எட்டாக் கனியாகும். அவர்கள் செல்வச் செழிப்புள்ள வாழ்வைப் பற்றிச் சிந்திக்கவும் முடியாத நிலையிலுள்ளனர். அத்தகைய பெண்கள் பணம், வசதிகள் கருதிக் காதலிக்க முற்படுகின்றனர். சமுதாயத்தின் இந்த நிலையை சிவசங்கரி சுட்டிக்காட்டுகிறார்.

**அந்நிய நாட்டுப் பெண்**

'திரிவேணி சங்கமம்' என்னும் புதினத்தில் ஆசிரியர் பெண்களின் ஒருதலைக் காதல் பற்றிக் கூறுகிறார். அவர்கள் தம்முடைய காதல் ஒருதலைப் பட்சமானது என்பதை உணர்ந்தும். அக்காதலை மறக்கவில்லை,

துறக்கவில்லை, இதற்கு அந்நியநாட்டுப் பெண்களும் விதிவிலக்கல்ல. மரியாதாம்சன் என்னும் அமெரிக்க நாட்டுப் பெண் தான் விரும்பிய இந்திய இளைஞன் சங்கரிடம் "ஆரம்பத்திலிருந்தே நான் உன் மேல் கொண்டுள்ள காதல் ஒருதலைப் பட்சமானது"[21] என்று அவள் கூறுவதிலிருந்து இது ஒருதலைக் காதல் என்பது உறுதியாகின்றது.

காதலைப் புனிதமான, ஆழமான, அன்பாக எண்ணுகின்ற பெண்கள் தான் மிகுதி. இந்திய நாட்டுப் பெண்கள் மட்டுமல்ல, இந்தியப் பண்பாட்டை, கலாச்சாரத்தை விரும்புகின்ற அந்நிய நாட்டுப் பெண்களும் காதலைப் புனிதமாக எண்ணி தான் விரும்பிய ஒருவனுக்காகவே வாழ்ந்து மறைகின்றனர். 'திரிவேணி சங்கமம்' என்னும் நாவலில் மரியா என்னும் அமெரிக்கப் பெண் சங்கர் என்ற இந்தியனை விரும்புகிறாள். அவனிடம் தானாகவே சென்று பழகுகிறாள். அவனுக்காகத் தன் வாழ்க்கையை அர்ப்பணிக்கவும் தயாராக இருக்கிறாள். ஆனால் அவனோ இவளை அடிக்கடி சந்திப்பதைக் கூட தவிர்க்க விரும்புகிறான் என்றாலும் மரியா இந்தியப் பண்பாட்டில் ஈடுபாடு கொண்டிருப்பதை அறிந்து இந்தியக் கலாச்சாரம், பண்பாடு பற்றி எடுத்துரைப்பான். அப்போதுகூட நல்ல மாணவன் கிடைத்துவிட்ட ஆசிரியர் அடையும் மகிழ்ச்சியைத்தான் அவன் மனதில் காணமுடிகிறது.

அமெரிக்கப் பெண்ணான மரியா தாம்சன் அவளுடைய காதல் ஒருதலைக் காதல் என்பதை அறிந்தும்கூட அவனுடன் உறவு கொள்கிறாள். ஆனால் சங்கரோ காதலினால் அவளுடன் உறவு கொள்ளவில்லை. மரியா அன்னிய நாட்டுப் பெண்ணாயினும் இந்திய நாட்டுப் பண்பாட்டிற்காக அந்நாட்டைச் சேர்ந்த ஒரு ஆணின் மீது காதல் கொள்கிறாள். இறுதிவரை இந்தியப் பண்பாட்டிற்கேற்றாற் போல் ஒருவன் - ஒருத்தி மரபின் படி வாழ்ந்து தன்னுடைய காதல் உண்மையானது என்பதை மெய்ப்பித்து விடுகிறாள். சிவசங்கரி தன்னுடைய புதினத்தில் இந்தியப் பெண்களை மட்டும் படைக்கவில்லை. அந்நிய நாட்டுப் பெண்களைப் பற்றியும் அவர்கள் சந்திக்க நேர்ந்த சிக்கல்களைப் பறறியும் விவரித்துப் படைத்துள்ளார்..

**அலைபாயும் உள்ளத்தால் ஏற்படும் காதல்**

அன்பினால் காதல் ஏற்படுவது போல் அலைபாயும் உள்ளத்தாலும் காதல் ஏற்படுவதுண்டு. தான் கற்பனையில் கண்டது போல் கணவன் அமையாததால் கமலி தன் துணைவன் முரளியை விட்டுவிட்டு மனோகரை விரும்புகிறாள். “தப்புப்பண்ணுகிறோம் என்ற உதைப்பு இல்லாமல் சந்தோஷமாக இருக்க முடிகிறதா! இதற்குப் பேர் தான் காதலா? மனோகரை தான் காதலிக்கிறேனா?”[22] என்று கமலி தனக்குள்ளேயே கேட்டுக் கொள்கிறாள்.

மனோகரின் மீது ஏற்பட்ட காதலினால் அவனிடம் தன்னை மணந்து கொள்ளும்படி வேண்டுகிறாள். ஆனால் அவன் “தாலியா? உனக்கு நா கட்டணுமா? அந்த வார்த்தைக்கு அர்த்தம் என்னன்னு உனக்கு தெரியுமா? என்னைவிட பணக்காரனா, அழகானவனா ஒருத்தன் கிடைச்சா ஒரு தரம் உருவிப் போட்டுட்டு வந்த மாதிரி இதையும் நீ விட்டெறிஞ்சிட்டு போக மாட்டேன்னு என்ன நிச்சயம்”[23] என்று கேட்டு அவள் உள்ளத்தின் சலனத்தை வெளிப்படுத்துகிறாள். அலை பாயும் உள்ளத்தால் ஏற்படுகின்ற காதல் வெற்றியடைவதில்லை. அது முறையற்றதாகவும் விளங்குவதைத் ‘திரிசங்கு சொர்க்கம்’ என்ற புதினத்தில் எடுத்துக் காட்டியுள்ளார் ஆசிரியர்.

அலைபாயும் உள்ளத்தால் ஏற்படும் காதலைப் பற்றி சிவசங்கரி தமது ‘கப்பல் பறவை’ என்னும் நாவலில் எடுத்துரைக்கின்றார். திருமணமான வாசுதேவன் மனதில் ஏற்பட்ட சபலத்தினால் சுஜாவை விரும்புகிறார். “பதினெட்டு வயசுப் பையன் மாதிரி என்னை நீ துள்ள வைக்கிற உனக்கு தெரியுமா? சுஜா? உன் பக்கத்துலே இருக்கிறப்போ ஐ.ஃ.பீல் லைக் எ டீன் ஏஜர். . . ஆனா இப்படியெல்லாம் பேசற நா இதுவரைக்கும் என் மனைவியைத் தவிர வேறு எந்தப் பெண் கிட்டயும் நெருக்கமாக பழகாதவன். புத்திய அலையவிடாதவன்னு சொன்னா அதை சத்தியமான பேச்சா நம்புவியா சுஜா!”[24] என்று வாசுதேவன் கூறுவதிலிருந்து அவளுடைய அலைபாயும் உள்ளமும் அதனால் சுஜாவின் மீது ஏற்பட்ட காதலும் புலனாகின்றது.

இளமையைக் கடந்து விட்ட போதும் வாசுதேவனின் மனச் சலனத்தினால் மனைவியையும் விவாகரத்து செய்ய முடிவெடுக்கிறார். இறுதியில் அவர் மனைவி கருவுற்றதும் தன் மனைவியைப் பிரிய முடியாத நிலையில் அவளை விவாகரத்து செய்யும் எண்ணத்தைக் கைவிட்டு விடுகிறான்.

வாசுதேவன் திருமணமானவர் என்பது தெரிந்திருந்தும் சுஜா அவரை விரும்புகிறாளென்றால் அவளது அலைபாயும் உள்ளமே காரணம். இதனை "யாதார்த்தம், நிதானம், புத்திசாலித்தனம் என்றெல்லாம் பேச நல்லா இருக்கு சங்கர். ஆனா நாம உணர்ச்சி வசப்பட்டுப் போறப்போ சந்தோஷமா, வருத்தமான்ற கேள்வி எழும்பறப்போ எல்லாம் அடிபட்டுப் போயிடறது நிஜம்"[25] என்று சுஜா கூறுவதிலிருந்து அவளுடைய காதலுக்கு அலைபாயும் உள்ளம் தான் காரணம் எனலாம். மனச்சலனங்களினால் உண்டாகும் காதல் வெற்றியடைவது கடினமான தொன்றாகும்.

**காதல் தோல்வி**

காதலுக்கும் அதன் வெற்றிக்கும் பல காரணங்கள் இருப்பதுபோலவே, தோல்விக்கும் பல காரணங்கள் உண்டு. பல காரணங்களினால் காதல் தோல்வியடைவதுண்டு. இளம் வயதினர் காதல் கொள்ளும் போது, சாதி, சமயம், பணம், பெற்றோர் இடையீடு என்பவற்றின் காரணமாக அவர்களுடைய காதல் தோல்வியடைந்து விடுகின்றது. ஒருதலைக் காதல் முறையற்ற காதல்

அதாவது அலைபாயும் உள்ளத்தால் ஏற்படுகின்ற காதல் இவையெல்லாம் பெரும்பாலும் வெற்றியடைவதில்லை.

இக்காலச் சமுதாயத்தில் திருமணமான ஆடவனை கன்னிப்பெண்கள் விரும்புவது தவறல்ல என்று பெண்கள் பலர் எண்ணுகின்றனர். ஆனால் அது வெற்றியடைவது என்பது இயலாத ஒன்றாகி விடுகின்றது. இத்தகைய காதல் தோல்வியை சிவசங்கரி ‘கப்பல் பறவை’ என்னும் புதினத்தில் எடுத்துக் காட்டுகின்றார். சுஜா என்னும் கன்னிப் பெண் வாசுதேவனிடம் “நிர்மலாவை விவாகரத்து பண்ணிட்டு என்னை நீங்க கட்டிக்கிட்டா என்ன வாசு? ப்ளீஸ். . ப்ளீஸ்”[26] என்று அவள் மனைவியை விவாகரத்து செய்யும்படி தூண்டுகிறாள். எனினும் அவள் எண்ணம் ஈடேறவில்லை. வாசுதேவனும் சுஜாவின் மீது காதல் கொண்டிருந்தார். இருந்தாலும் கருவுற்ற அவர் மனைவியை அவரால் கைவிட முடியவில்லை. இறுதியில் சுஜா தானாகவே வாசுதேவன் வாழ்க்கையிலிருந்து விலகிவிட்டாள். பெரும்பாலும் இம்மாதிரியான காதல் நெறி பிறழ்ந்த காதல் என்றே கூறலாம்.

திருமணமானவன் மீது காதல் கொண்ட பெண்களின் காதல் இறுதியில் தோல்வியடைகின்றது. ஏனெனில் ஆணின் அலைபாயும் மனத்தினால் தோல்வியடைகின்றது. அவர்களின் காதல் உடற்கவர்ச்சியினாலேயும் ஏற்பட்டமையால் தோல்வியடைகிறது.

திருமணமாகாத ஆடவன் ஒரு கன்னிப்பெண்ணை காதலித்தாலும் அதுவும் தோல்லியடைவதுண்டு. அதற்கு சாதி, பணம், பெற்றோரின் இடையீடு ஆகியவை காரணங்களாகும். சில இடங்களில் ஒருதலைக் காதலாகவும் அமைந்து விடுவதுண்டு. இன்னும் சில இடங்களில் பெண்களே தன்னை விரும்புகின்ற, தானும் விரும்பிய ஆடவனை விட்டு வேறு ஒரு ஆடவனை மணந்து கொள்வதுண்டு. அப்படிப்பட்ட பெண்கள் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு வாழ்க்கையின் வசதிக்காகத் தன் காதலை மாற்றிக் கொள்கின்றனர்.

இக்காலச் சமுதாயத்திலுள்ள பெண்கள் காதலை விட பொருளுக்கே முதலிடமும், முக்கியத்துவமும் அளிக்கின்றனர். பொருளுக்காகவும், வாழ்க்கை வசதிக்காகவும் காதலை துறந்துவிடுகின்ற, மாற்றிக் கொள்கின்ற பெண்களை இன்றைய சமுதாயத்தில் காணலாம் என்பதை சிவசங்கரி தம்முடைய ‘காற்றுள்ள போதே’ என்னும் புதினத்தில் எடுத்துக் காட்டியுள்ளார். நடேசன் என்பவருக்கு இரண்டாவது மகளாக பிறந்த வேணி, ஓராண்டுக்கு மேல் தான் விரும்பிய செந்திலை விடுத்து, தன் தமக்கை சிவகாமிக்கு வந்த வரனான குமாரைத் திருமணம் செய்ய சம்மதித்து விடுகிறாள். இம்மாற்றத்திற்குக் குமாரின் உயர்ந்த வேலை, சம்பளம், கார், வீடு ஆகியவைதான் காரணங்களாம்.

அழகிய தோற்றம் கொண்ட குணக்குன்றான செந்திலை நொடிப் பொழுதில் மறந்து அம்மை வடுக்கள் நிறைந்த குமாரை இரண்டாம் தாரமாக மணக்க வேணி சம்மதித்து விடுகிறாள். இக்காலத்துப் பெண்கள் எளிதில் தங்கள் மனதை மாற்றிக் கொள்கின்றனர். இதனைச் சிவசங்சங்கரி "கடைசியில் சட்டையை கழற்றி மாற்றிக் கொள்கிற மாதிரி மனதையும் நொடியில் மாற்றிக் கொண்டு, காற்றுள்ள போதே தூற்றிக் கொள்வது மட்டும் தான் என் இலட்சியம், வேறு எதுவும் இல்லை என்று திட்டவட்டமாய் சொல்லிக் காட்டிவிட்டாளே"[27] என்று லோகநாதன் என்னும் கதை மாந்தர் வாயிலாக எடுத்துரைக்கின்றார். தன்னை விரும்புகின்ற செந்திலை பற்றி கொஞ்சமும் எண்ணிப் பார்க்காமல், காதல் தோல்வியைப் பற்றியும் கவலைப்படாமல் பணத்திற்காகவே வாழ முற்படுகின்றாள் வேணி. இவளைப் போலவே இக்காலத்துப் பெண்களின் நிலையுள்ளது.

சிவசங்கரி தமது 'திரிவேணி சங்கமம்' என்னும் புதினத்தில் அன்னிய நாட்டுப் பெண் மரியா தாம்சன் இந்திய இளைஞனான சங்கரை விரும்புவதாகக் கூறியுள்ளார். இனம், மொழிக்கு அப்பாற்பட்ட காதல் வெற்றியடைவதுண்டு. ஆனால் இங்குள்ள காதல் ஒருதலைக் காதலாக அமைந்துள்ளது. அதாவது மரியாதாம்சன் சங்கரை விரும்பி, அவன் குழந்தையும் அவள் வயிற்றில் வளர்கிறது. ஆனால் குடும்பச் சூழ்நிலையின் காரணமாக இந்தியாவிற்கு வந்து விடுகிறான். அதன்பின் அவன் மரியாவை நினைத்துக் கூடப் பார்க்கவில்லை.

சங்கரும் அவளை விரும்பியிருந்தால் இந்தியாவில் வேறொரு திருமணம் செய்திருக்கமாட்டான்.

வாழ்க்கையில் சங்கருக்கு ஏற்பட்ட வேதனையை மறப்பதற்காகத்தான் அவளுடன் பழகினான். "இதனை வாழ்க்கையில் எனக்கு ஏற்பட்ட மிகப் பெரிய வேதனையைத் தன்னந்தனியே, தாங்கிக் கொள்ள இயலாமல் நான் தவித்த பொழுது, எனக்கு மரியா என்னும் பெண் எப்படி நெருங்கிப் பழகி, அந்த நெருக்கத்தால் ஒரு இதமளித்ததால் என்னைப்பற்றி . . ."[28] என்று சங்கர் தன் மனைவி அனுவிடம் கூறுவதிலிருந்து மரியாவின் காதலுக்கு அவன் முக்கியத்துவம் அளிக்கவில்லை என்பது தெரிகிறது. பெரும்பாலும் ஒருதலைக் காதல் தோல்வியைச் சந்திப்பதுதான் இயல்பான ஒன்றாக அமைந்துள்ளது.

சமுதாயத்தில் முறையற்ற காதலும் வெற்றியடையவில்லை. திருமணமான ஒரு பெண் தன் கணவனை விட்டு மணமான வேறொரு ஆடவனை விரும்புவது சமுதாய மரபிற்கு அப்பாற்பட்ட ஒன்றாகும். இப்படிப்பட்ட காதலும் தோல்வியடைகின்றது. இதனை சிவசங்கரி தமது 'திரிசங்கு சொர்க்கம்' என்னும் புதினத்தில் படைத்துள்ளார். தன்னுடைய கணவன் முரளியை வெறுத்து கமலி, மனோகரை விரும்புகிறாள். மனோகருக்கும் இவளை விரும்புவதாகவே தன் எண்ணம் நிறைவேறும் வரை அவளை விரும்புவதாகவே பழகி விட்டு இறுதியில் கைவிட்டு விடுகிறான்.

**நெறி பிறழ்ந்த காதல்**

முறையற்ற காதலில் தோல்வியடைந்த பின்பே, தான் செய்தது தவறு என கமலி உணர்கிறாள். வேண்டாம் இனி மனோகர் சகாப்தமே வேண்டாம் என்று தான் காதலித்தவனை விட்டுக் கமலி விலகிவிடுகிறாள். கமலியின் நிலையில்லாத உள்ளம் தான் முறையற்ற காதலுக்கு காரணமாக அமைகிறது. இதனை நெறிபிறழ்ந்த காதல் என்றும் கூறலாம். இப்படிப்பட்ட காதல் வெற்றியடைவதில்லை. அது மட்டுமல்ல காதலில் தோல்வியடைந்த கமலி கணவனுடன் சேர்ந்து வாழ்கின்ற வாய்ப்பையும் இழந்து தன்னந்தனியாளாகத் தவிக்கின்றாள்.

பொருத்தமில்லாத காதலும் தோல்வியில்தான் முடியும். இதனை ஆசிரியர் 'கப்பல் பறவை' என்றும் புதினத்தில் சித்திரித்துக் காட்டுகிறார். வயதில் தன்னை விடப் பன்மடங்கு முதியவரும், திருமணமானவருமான வாசு தேவனை சுஜா விரும்புகிறாள். அவரும் சுஜாவைப் பார்த்தவுடன் மனச் சலனத்தினால் அவர்மீது காதல் கொள்கிறார். இல்லற வாழ்க்கையில் குழந்தை இல்லாமல் ஏக்கம் கொண்டிருந்த அவர் தன் மனைவியை விவாகரத்து செய்ய முடிவெடுக்கிறார். ஆனால் இருபத்திமூன்று ஆண்டுகளுக்கு பின்பு மனைவி கருவுற்றதையறிந்து வாசுதேவன் குழம்பினார். இந்நிலையில் சுஜா தானாகவே அவரைவிட்டுப் பிரிந்துவிட முடிவெடுத்தாள்.

வாழ்க்கையில் குழந்தை பிறந்த பின்பு தன்னுடைய பிரிவு வாசுதேவனைத் துன்புறுத்தாது. மேலும் நாளைக்கு நிர்மலாவைப் பிரிஞ்சப்புறம் ஆயுசு பூரா அந்த குற்ற உணர்வு வாசுவை உறுத்திக்கிட்டே இருக்கேன் தோணுது"[29] என்று சுஜா கூறுவதில் இருந்து மணமான ஒருவர் மனைவியை பிரிந்து வேறொரு பெண்ணை காதலித்தாலும் அக்காதல் வெற்றியடையாது என்று தெரிகிறது. பொருத்தமற்ற காதலும் தோல்வியில்தான் முடிவடைகிறது.

**மணவாழ்வில் மனமகிழ்ச்சி**

திருமணம் என்ற சடங்கு குடும்ப வாழ்க்கையை உருவாக்கும் அமைப்பாக விளங்குகிறது. ஆண் பெண் இருவரும் மணவாழ்வில் கருத்தொருமித்து வாழ்ந்தால்தான் மகிழ்ச்சியடைய முடியும், கணவன் மனைவி இருவரும் ஒருவரையொருவர் புரிந்து கொண்டு ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுத்து ஒருவருடன் ஒருவர் மனம் ஒன்றி வாழ்ந்தால் தான் மணவாழ்வில் அமைதி கிடைக்கும். மன அமைதி கிட்டினால் மனமகிழ்ச்சி தானாகவே கிடைத்துவிடும்.

காதல் திருமணத்தில்தான் மகிழ்ச்சி உண்டாகும் என்று கூற முடியாது அல்லது பெற்றோர் அமைத்துத் தருகிற மணவாழ்வில் தான் மகிழ்ச்சி ஏற்படும் என்று கூற இயலாது. மணவாழ்வினை யார் அமைத்துக் கொண்டாலும் அவ் வாழ்விற்குரியவர்களால்தான் மகிழ்ச்சி உண்டாகும், வாழ்க்கையில் வளைந்து

கொடுத்து வாழ்ந்தால் தான் அமைதியுண்டாகும். இதனை சிவசங்கரி தமது நாவல்களில் எடுத்துக் காட்டுகிறார்.

முரளியும், தர்மாவும் ஒருவரை ஒருவர் விரும்பிப் பெரியவர்களுடைய சம்மதத்துடன் திருமணம் செய்து கொள்கின்றனர். தர்மாவின் 'தான்' என்னும் ஆணவத்தாலும், வளைந்து கொடுக்காத தன்மையினாலும் அவர்களுடைய மணவாழ்வில் அமைதிகுலைந்து விடுகிறது. முரளி தர்மாவை விட்டுவிலக ஆரம்பித்து விட்டான். அவன் மனதில் நிம்மதியில்லாததால் குடும்பத்தில் கவனம் இல்லாமல் அலைய ஆரம்பித்து விட்டான்.

"வாழ்க்கையில் யாரோடு சேர்ந்து இருந்தாலும், அது பெற்றோரோ, உடன் பிறந்தவரோ இல்லை. கணவனோ யாராக இருந்தாலும் வளைந்து கொடுத்து வாழ்ந்தால் தான் அமைதியுடன் வாழ முடியும்"[30] என்று ஆசிரியர் தமது 'நதியின் வேகத்தோடு' என்னும் புதினத்தில் எடுத்துரைக்கின்றார். மணவாழ்வின் அமைதிக்கு பெண்களே பெரும் பொறுப்பு வகிக்கின்றனர். "பொண்ணுங்கறவோ நாணல் மாதிரி இருக்கணும் தர்மா. ஆத்துல வெள்ளம் வரச்சே வளைந்து கொடுக்காம மரம் மாதிரி நின்னா வெள்ளத்தோட வேகம் அந்த மரத்தைப் பிடுங்கி எறிஞ்சிடும். ஆனால் நாணல் மாதிரி வளைஞ்சு கொடுத்தா வெள்ளம் வடிஞ்ச பிறகு மறுபடியும் தலைநிமிர்ந்து நிற்கலாம்"[31]

என்று தர்மாவினுடைய அம்மாவின் வாயிலாக ஆசிரியர் மண வாழ்வில் அமைதியும், மகிழ்ச்சியும் கிடைக்கும் வழியை விளக்குகிறார்.

**மணவாழ்வில் மணமகிழ்ச்சியின்மை**

திருமணமான பின் கணவன் இருவரும் தங்கள் தாம்பத்ய வாழ்க்கையில் பிறருக்கு இடமளிக்கக்கூடாது. மணவாழ்வில் ஆண்கள் பிற பெண்களை நாடிச் செல்வதால் அவர்கள் வாழ்க்கையில் மகிழ்ச்சி மறைந்து விடுகிறது. இதனை சிவசங்கரி தமது ‘வெட்கம் கெட்டவர்கள்’ ‘மூக்கணாங்கயிறு’ என்னும் புதினங்களில் எடுத்துக் காட்டியுள்ளார்.

புவனாவிற்கும் துரைசாமிக்கும் உள்ளம் ஒன்றாக திருமணம் நடந்து விடுகிறது. கல்வியில் ஆர்வமுடைய புவனாவினால் மணவாழ்வில் துரைசாமிக்கு ஈடு கொடுக்க முடியவில்லை. துரைசாமி புவனாவின் தங்கை சுந்தரியிடம் தன்னை இழந்து அவளை இரண்டாம் தாரமாக மணந்து கொள்கிறான். மகிழ்ச்சியில்லா மணவாழ்வில் ஈடுபட விரும்பாத புவனா வேலைக்குச் சென்று விடுகிறாள். அவளுக்கு மணவாழ்வு என்பது விரும்பத்தகாத, வேண்டாத ஒன்றாகவே தோன்றியது. தன் மகள் யசோதையின் திருமணத்திற்கு தந்தையாக வந்து சிறப்பிக்க வேண்டும் என்று கேட்கும் போது கூட துரைச்சாமி அவளிடம் உடல் இன்பத்தைத்தான் கேட்கிறான்.

இதற்குப் பின்பும் அவன் முன்னால் நிற்க விரும்பாத யசோதா தன் அன்னையை அழைத்துக்கொண்டு வந்து விடுகிறாள்.

மனச்சலனத்தினால் மணவாழ்வில் அமைதி குலைந்து விடும். இதனை ‘மூக்கணாங்கயிறு’ என்னும் நாவலில் காணலாம். அலைபாயும் உள்ளத்தினால் மூர்த்தி பல பெண்களோடு தொடர்பு கொள்வதை அவன் மனைவி சந்திரா கேள்வி கேட்கத் தொடங்கினாள், “நான் ஆம்பிளை, எப்படி வேணா இருப்பேன் உன்னை சந்தோசமா வைச்சிக்கறேனா? இல்லையா? அதோட நில்லு”[32] என்று மூர்த்தி பதிலுரைப்பதன் வாயிலாக அவர்களுடைய மணவாழ்வில் அமைதி இல்லை என்பதை ஆசிரியர் எடுத்துரைக்கின்றார்.

திருமணத்திற்குப் பின் கணவன் - மனைவி இருவரும் ஒருவருக்கொருவர் மட்டுமே சொந்தமுடையவர்களாய் உரிமை யுடையவர்களாய் வாழ்ந்தால் தான் மண வாழ்வில் மகிழ்ச்சியைக் காண முடியும். இக்கருத்திணை ‘அடிமாடுகள்’ என்னும் நாவலில் காணலாம். மேலும் இந்நாவலில் வரதட்சணையினால் வாழ்க்கையில் ஏற்படுகின்ற அமைதியின்மையையும் ஆசிரியர் எடுத்துக் காட்டுகிறார். சீட்டாட்டம் போன்ற கெட்ட பழக்கங்களையுடைய நடராஜ் தன் மனைவியின் அன்னை இறந்ததற்குக் கூட அவளை அவள் பிறந்த வீட்டுக்கு அனுப்ப மறுத்து விடுகிறான். மீனாட்சி மிகவும் அழுது புலம்பி வேண்டிக் கொண்டபின் ‘போயிட்டு திரும்பறப்போ’ உங்கம்மா போட்டுக்கிட்டிருந்த நகை,

சேர்த்து வைச்சிருக்கிற பணத்துல பாதி கொண்டு வரனும். இதுக்கு சம்மதம்னா நீ மட்டும் புறப்பட்டுப் போ"[33] என்று கூறுகிறான். இறுதியில் அவன் தங்கை பார்வதியை இரண்டாம் தாரமாக மணந்து கொள்கிறான். மணவாழ்வு வெற்றியுடையதாக அமைய ஆண் - பெண் இருவருடைய மன ஒற்றுமையும் வேண்டும்

ஆண்களுடைய மனச் சலனத்தினால் மட்டுமில்லாமல் பெண்களுடைய மனச் சலனத்தினாலும் மணவாழ்வில்வில் அமைதி மறந்து விடும். இதனை ஆசிரியர் 'திரிசங்கு சொர்க்கம்' என்னும் நாவலில் தெளிவு தெளிவுறுத்துகின்றார். பெரியோர்களின் வற்புறுத்தலுக்காக முரளியை மணந்து கொண்ட கமலி அவனுடன் வாழ்கின்றார். பெரியோர்களின் வற்புறுத்தலுக்காக முரளியை மணந்து கொண்ட கமலி அவனுடன் வாழும் மணவாழ்வில் நிறைவடையவில்லை. அவருடைய அலைபாயும் உள்ளம் பிறிதொரு ஆடவனை நாடிச் செல்கிறது. இதனை ஆசிரியர் "முரளியின் பக்கத்தில் படுக்கவிடாதபடி ஆத்திரம் சீறத் துவங்க தலைகாணியுடன் எழுந்து கூடத்து சோபாவில் படுத்த போது நெஞ்சு பூராவும் மனோகரின் நினைப்பு இதமாக அலைமோத முற்பட்டது"[34] என்று கூறுவதன் மூலம் ஒரு பெண்ணின் மனச்சலனத்தை எடுத்துக் காட்டுகிறார்.

மனோகரை விரும்பிய கமலி தன் கணவனை விட்டுப் பிரிந்து விடுகிறாள். ஆடம்பரமான வாழ்க்கையை விரும்பிய கமலியின் மனச்சலனத்தினால் கணவனைத் துறந்து வேறு ஒருவனுடன் சென்று விட்டாள். அவள் தன்னுடைய மன அமைதியைக் கெடுத்தது மட்டுமில்லாமல் முரளியின் மன அமைதியையும் கெடுத்து விட்டாள்.

**முடிவுரை**

சமுதாயத்திலுள்ள காதல் வாழ்வைப் பற்றியும், காதலில் ஈடுபட்டவர்களைப் பற்றியும் சிவசங்கரி தமது நாவல்களில் விரிவாகவே சித்திரித்துள்ளார். காதல் வெற்றியில் தான் முடியும் என்பதில்லை, காதலுக்கு வயது வரம்பு கிடையாது என்பன போன்ற கருத்துக்களைச் சிவசங்கரியின்

நாவல்களில் காண முடிகிறது. இக்காலச் சமுதாயம் பல்வேறு வாழ்வியல் நெருக்கடியில் சிக்கித்தவிக்கிறது. அத்தகைய சமுதாயத்தில் சிக்கித்தவிக்கும் மனிதர்களின் வாழ்க்கையும் அப்படித்தானே இருக்கும்? என்று கேட்கிறார். புதின ஆசிரியர் சிவசங்கரி. பொருளாதாரம் மன வக்கிரம், எற்றத்தாழ்வுகள் என்பனவையே பெரும்பாலான காதலர்களின் வாழ்வியலைத் தீர்மானிக்கின்றன என்று அடிநாதமாகப் புலப்படுத்துகிறார்.

## சான்றெண் விளக்கம்

1. பாவேந்தர் கவிதைகள், மாந்தோப்பில் மணம் , 9.
2. திரு.வி.க.பெண்ணின் பெருமை அல்லது வாழ்க்கைத்துணை ப.116.
3. சிவசங்கரி 'நதியின் வேகத்தோடு' ப.147
4. மேலது. ப.169
5. சிவசங்கரி 'பயிரைமேய்ந்த வேலிகள்' ப. 47
6. மேலது, ப.48.
7. சிவசங்கரி 'கப்பல் பறவை' ப. 161
8. மேலது. ப. 114
9. மேலது. ப. 134
10. மேலது. ப. 130
11. மேலது. ப. 131
12. மேலது. ப. 152
13. வ.சுப.மாணிக்கம், 'தமிழ்க் காதல்' ப. 260
14. சிவசங்கரி 'பாலங்கள்' ப.321
15. சிவசங்கரி 'இதுவும் ஒரு தாஜ்மஹால்' ப..21
16. மேலது. ப. 14
17. மேலது. ப. 76

18. மேலது. ப. 83

19. சிவசங்கரி ‘ருசிகண்ட் பூனை’ ப. 47

20. மேலது. ப. 78

21. மேலது. ப. 81

22. சிவசங்கரி ‘திரிவேணி சங்கமம்’ ப. 29

23. சிவசங்கரி ‘ திரிசங்கு சொர்க்கம்’ ப. 97

24. சிவசங்கரி ‘கப்பல் பறவை’ ப. 120

25. மேலது ப. 122

26. மேலது. ப. 167

27. மேலது. ப. 167

28. சிவசங்கரி ‘காற்றுள்ள போதே’ ப. 93

29. சிவசங்கரி ‘கப்பல் பறவை’ ப. 31

30. சிவசங்கரி ‘ திரிசங்கு சொர்க்கம்’ ப. 202

31. சிவசங்கரி ‘நதியின் வேகத்தோடு’ ப.208

32. சிவசங்கரி மூக்கணாங்கயிறு ப. 227

33. மேலது. ப.

34. சிவசங்கரி அடிமாடுகள் ப. 40

# இயல் - 5

# பெண்கள் பண்பாடு

**முன்னுரை**

இந்தியப் பண்பாட்டின் அடிப்படைத் தன்மையான கற்பும் அதனை இந்தியப் பெண்கள் பேணும் முறையும் குறித்து சிவசங்கரியின் கருத்துக்களை இவ்வியல் ஆராய்கின்றது. புதினத்தில் பெண் பாத்திரங்களைப் பகுத்து அவர்களின் வாயிலாகவும் இந்தியப் பண்பாட்டை விளக்குவதாகவும் இவ்வியல் அமைகிறது.

**ஒருத்திக்கு ஒருவன்**

பண்பாடு என்பது நாட்டுக்கு நாடு வேறுபாடுகிறது. மற்ற நாடுகளை விட இந்திய நாட்டில் ஒழுக்கமான வாழ்க்கைக்கு முக்கியத்துவ மளிக்கப்படுகிறது. பாரதப் பண்பாடுகளில் மகளிர் கற்பு மேன்மையுடைய ஒன்றாகும். கற்பு என்பது மிகப்பெரும் ஒழுக்க முறையாகத் தொன்று தொட்டுப் பேசப்பட்டு வருகின்றது. ஒருவனுக்கு ஒருத்தி, ஒருத்திக்கு ஒருவன் என்பதுவே இந்தக் கற்பு நெறியின் பொதுவான கருத்து. இந்தக் கருத்தை மையமாக வைத்து எழுதப்பட்ட இதிகாசமே இராமாயணம். ஆனால் நடைமுறையில் ஒருத்திக்கு ஒருவன் என்பது வற்புறுத்தப்படுவது போல ஒருவனுக்கு ஒருத்தி என்ற கோட்பாடு வற்புறுத்தப்பட வில்லை.

**கற்பு நிலை**

காதலர் இருவர் கருத்தொருமித்து இருக்க வேண்டும். உள்ளத்தாலும் உடலாலும் ஒன்றுபட்ட நிலை வேண்டும். உள்ளத்தாலும் பிறரை நினையாமை வேண்டும் என்று கற்பிற்கு இலக்கணம் கூறுவது மரபு. இதனைத் தொல்காப்பியர் தனது நூலில் குறிப்பிடுகிறார்.

" ஒன்றே வேறே என்றிரு பால்வயின்

ஒன்றி உயர்ந்த பால தாணையின்

ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப

மிக்கோ னாயினுங் கடிவரை இன்றே"[1]

என்று தொல்காப்பியரின் நூற்பா விளக்குகிறது.

" பட்டங்கள் ஆள்வதும் சட்டங்கள் செய்வதும்

பாரினில் பெண்கள் நடத்த வந்தோம்!

எட்டும் அறிவினில் ஆணுக்குப் பெண்

இளைப்பில்லை காண்னென்று கும்மியடி"[2] – என்பார் பாரதி

பாரதியின் இப்பாடலுக்கு ஏற்ப பெண்களும், ஆண்களைப் போலக் கல்விகற்று பொறுப்பாகப் பணிகளை மேற்கொள்கின்றனர். அதுபோன்று ஆடவர் பலருடன் சேர்ந்து படிக்க நேரும்போது, மனதில் சலன எண்ணங்களும், சபலச்

சிந்தனைகளும் உருவாகவும் வாய்ப்புகள் உள. சுற்றுப்புறச் சூழல் காரணமாக ஒருவனையே மனத்தில் நினைத்திருக்க வேண்டும் என்பதும் மன உறுதி வேண்டும் என்பதும் இயலாத காரியங்களாகிப் போவதுமுண்டு.

**மன உறுதி**

தற்காலத்தில் கற்புக்கு அவரவர் கொள்கையின் படி விளக்கம் கூறுவர். மன உறுதி தான் கற்புக்கு மிக முக்கியமானது. இன்றைய சமுதாயத்தில் ஒருவன் ஒருத்தியாக வாழ்வதுதான் கற்பு நெறியாகும். அதிலும் பெண்களின் மனஉறுதியே சிறந்த நெறியாகும். வாழ்க்கையில் பிற ஆடவர் குறுக்கிட முயன்றாலும் பெண்கள் மனம் தளர்ந்து விடாமல் தன்மனத்தில் எண்ணிய ஆடவனுடன் மட்டுமே வாழ வேண்டும். அவன் இறந்து விட்டால் கூட இந்தியப் பெண்கள் அவன் நினைவிலேயே தன் வாழ்நாளைக் கழிப்பர்.

**பிற நாட்டு மகளிர்**

ஒருவனுடன் மட்டுமே வாழ்ந்து அவனுக்காகவே இறுதிவரை உயிருடனிருந்து அவனையே மனதில் எண்ணிக் கொண்டிருப்பதுதான் ஒரு பெண்ணின் கற்பு நெறியாகும். இதனை சிவசங்கரி தமது புதினத்தில் எடுத்துரைக்கின்றார். ஒரு அந்நிய நாட்டுப் பெண் இந்தியப் பண்பாட்டின்படி கற்பு நெறியைப் பாதுகாப்பதாகத் “திரிவேணி சங்கமம்” என்னும் நாவலில்

ஆசிரியர் கூறுகின்றார். ‘மரியாதாம்ஸன்’ என்னும் அமெரிக்கப் பெண் இந்தியப் பண்பாட்டின் மீது ஏற்பட்ட ஈடுபாட்டினால் சங்கர் என்னும் இந்தியனை விரும்புகிறாள். அவன் விருப்பத்தின்படி திருமணத்திற்கு முன்னரே அவனுடன் இல்லற வாழ்வையும் வாழ்ந்து விடுகிறாள். மணமாகாவிடினும் அவனே தன்னுடைய கணவன் என்று மனதில் உறுதி செய்து விடுகிறாள். அவனுடைய குழந்தையையும் ஈன்றெடுத்து விடுகிறாள். அதன் பின் வேறு எந்த ஆடவனையும் கூட மரியா மனத்தால் கூட எண்ணிப் பார்த்ததில்லை. இதனை “எத்தனையோ ஆண்கள் - விதவிதமான ஆடவர்கள் என் வாழ்க்கையில் குறுக்கிடப் பார்த்தார்கள். ஒன்றுக்கும் அசையவில்லை என் மனம். சங்கரை ஏற்றுக் கொண்ட இந்த மனம் வேறு எவரிடத்திலும் மறுபடியும் செல்லாது என்றாகி விட்டது”[3] என்று மரியாவின் வாயிலாக பிறநாட்டுப் பெண்களின் மனத்திட்பத்தை ஆசிரியர் எடுத்துக் காட்டுகின்றார்.

பாரத நாட்டுப் பண்பாட்டின் படி ஒரு பெண் தன் கணவனுக்கு உண்மையுள்ளவளாக வாழ வேண்டும். கணவனைத் தவிர வேறு ஆடவனுடன் தொடர்பு கொண்டால் அது கற்புத் தவறிய நெறியாகும். இந்திய நாட்டுக்கே உரிய இந்நெறியின் படி ஒரு அமெரிக்கப் பெண் வாழ்வதாகச் சிவசங்கரி தமது ‘திரிவேணி சங்கமம்’ என்னும் புதினத்தில் எடுத்துக் காட்டுகின்றார். அமெரிக்க நாட்டில் ஒருவருடன் வாழ விருப்பமில்லையென்றால் மணமுறிவு பெற்று வேறொரு ஆடவனைத் தன் வாழ்க்கைத் துணையாகத் தேர்ந்தெடுத்து

விடுவர் அந்நாட்டில் பெண்கள். மணமான பெண்களே இவ்வாறு வாழ்ந்தார்களெனில் மணமாகாத பெண்கள் மிகவும் எளிதாக தன் மனம் விரும்பாத ஆடவனிடமிருந்து விலகிவிடுவர். மணமாகாத பெண்கள் மணமுறிவு பெற வேண்டியதுமில்லை. எவ்வளவு நெருங்கிப் பழகினாலும் அவனுடன் உயிருக்குயிராகப் பழகி தொடர்பு கொண்டாலும் கூட அவன் தன்னோடு ஒத்து வாழ்வதற்குரியன் அல்லன் என்று அறிந்ததும், எந்த விதத் தயக்கமும் இன்றி அவனுடன் ஏற்பட்ட தொடர்பைத் துண்டித்து விடுவர் அமெரிக்கப்பெண்கள்.

மணமுறிவு பெறுதல், வாழ்க்கைத்துணையை மாற்றிக் கொள்ளுதல் என்பதெல்லாம் மிகவும் இயல்பாக நடக்கக்கூடிய அந்நிய நாட்டில் அந்நாட்டுப் பெண்ணொருத்தி தான் விரும்பிய ஆடவனுக்காகவே உயிர் வாழ்ந்து மறைந்ததாக ஆசிரியர் கூறுகிறார். அமெரிக்கப் பெண் மரியா குறிப்பாக இந்தியப் பண்பாட்டில் ஆர்வம் கொண்டதாலேயே ஓர் இந்திய இளைஞனை விரும்பி அவனுடன் தானே முன்வந்து தொடர்பு கொள்கிறாள். அவன் தாயகத்திற்குத் திரும்பிய பின்னரும் அவனை மறக்கவில்லை. மணமுறிவு ஏற்படாததால் அவனிடமிருந்து அவள் விலகவில்லை. அவனுடைய குழந்தைக்குத் தாயாகி அவனையே எண்ணிக் கொண்டிருக்கிறாள்.

மரியா தன் உள்ளத்தால் விரும்பிய ஓர் இந்திய இளைஞன் சங்கருக்காகவே வாழ்கிறாள். அவன் நாட்டுப் பண்பாட்டின்படி அவள் இனத்து ஆடவனையும் தன் வாழ்க்கைத் துணையாகத் தேடிக் கொள்ளவில்லை.

அந்நிய நாட்டுப் பெண்ணான மரியாவுக்கு இந்தியப் பண்பாட்டில் ஈடுபாடு ஏற்பட்டதன் காரணமாகவே அவள் இந்திய நாட்டுக்கே உரிய கற்பு நெறியிலிருந்து பிறழாமல் வாழ்ந்து மறைகிறாள். தற்காலத்திலேயும் இந்தியப் பெண் ஒருத்தி தன் வாழ்க்கைத் துணைவன் ஒருவனுக்கு மட்டுமே உண்மையுடையவளாக வாழ்கிறாள். மரியாவும் அதுபோல தான் விரும்பிய சங்கருக்கு உண்மையுள்ளவளாக வாழ்கிறாள்.

சங்கர் மூலமாகத் தனக்கு கிடைத்த குழந்தைக்குத் தாயாக வாழ்கிறாள். இந்திய உலகில் அவளுக்கென ஓர் உலகத்தை மகள் ஜேனெட் மூலம் படைத்துக் கொண்டு வாழ்ந்தாள். கற்பு நெறியை மதிக்கும் இந்திய நாட்டில் கூட மணமாகாத பெண்கள் தாம் விரும்பிய ஒருவனை அடைய முடியவில்லையெனில் தங்கள் உள்ளத்தை மாற்றிக் கொள்கின்றனர். இப்படிப்பட்ட கால கட்டத்தில் வாழ்ந்த அந்நியப் பெண் தான் விரும்பியவனுக்காகவும் தன்னை மணம் புரிந்து கொள்ளாத ஒருவனுக்கு உண்மையாக வாழ்ந்திருக்கிறாள். இதனை “நான் உனக்கு மிகவும் உண்மையாய் இருந்திருக்கிறேன். சங்கர் உள்ளத்தால் மட்டுமல்ல, உடலாலும் தான்”[4] என்று மரியா கூற்றின் வாயிலாக ஆசிரியர் எடுத்துரைக்கின்றார்.

சிவசங்கரி தமது புதினங்களில் அந்திய நாட்டுப் பெண் மூலமாக இந்தியப் பண்பாடு போற்றும் பண்பினைச் சிறப்பித்துக் கூறுகிறார். ஓர் இந்தியப் பெண் கற்பிலே சிறந்து விளங்குகிறாள் என்று கூறுவதற்கு

வாய்ப்புண்டு. ஆனால் பெண்களின் கற்பு நெறியை ஆசிரியர் வேற்று நாட்டுப் பெண், மூலம் அதுவும் மணமாகாத ஒருத்தியின் வாயிலாகச் சிறப்பித்துரைக்கின்றார்.

தற்காலத்தில் பெண்கள் பல ஆடவருடன் பழகுகின்றனர். அவருடன் வாழ வேண்டுமென்று எண்ணுகின்றனர். மனச்சலனம் ஏற்படுவதற்கு வாய்ப்புகள் மிகுதியாக உள்ள இக்காலத்திலும் பெண்கள் மன உறுதியுடன் இருக்கின்றனர். இதுவே பெண்களுடைய கற்பின் சிறப்பாகும். மணமாகாத பெண்கள் தாம் விரும்பிய ஒருவனை அடையமுடியவில்லையெனில் இறுதிவரை திருமணமே வேண்டாமென்று மன உறுதியுடன் வாழ்கின்றனர். இந்நிலையை இன்றைய சமுதாயத்தில் காணலாம்.

**குறை காணா மகளிர்**

ஒரு பெண் ஒருவனை விரும்பி விட்டால் அவனுடன் தான் வாழ வேண்டுமென்ற உறுதியுடனிருக்கிறாள். தான் விரும்பிய ஆடவனிடம் குறைகள் காணப்பட்டாலும் அதைப் பொருட்படுத்துவதில்லை. தன் உயிருள்ளவரை தான் விரும்பியவனையே நினைத்துக் கொண்டு வாழும் ஆற்றலுடையவள் பெண். தான் விரும்பியவனுடன் சேர்ந்து வாழ்வதற்கு வழியில்லையெனில் வேறொருவனைத் தன்னுடைய வாழ்க்கைத் துணையாகத் தேர்ந்தெடுப்பதில்லை.

சுஜா பொறியியல் துறையில் உயர்கல்வி கற்றுவிட்டு ஒரு தனியார் நிறுவனத்தில் பொறுப்புள்ள பதவி வகிப்பவள். அந்நிறுவனத்திற்கு வருகின்ற வாடிக்கையாளர்களுள் ஒருவரான வாசுதேவனை அவள் விரும்புகிறாள். வாழ்ந்தால் அவருடன் வாழ்வது என்ற மன உறுதியுடன் இருக்கின்றாள். அவர் தன்னுடைய மனைவியை மணவிலக்கு செய்து விடுவதாகவும் அறிவிக்கின்றார். எனவே சுஜா அவருடன் வாழப் போவது உறுதி என்ற நினைவுடனிருக்கின்றாள். இறுதியில் வாசுதேவன் மனைவி கருவுற்று விடுவதால், அவளை மணமுறிவு செய்ய இயலாதவராகின்றார். அவர் கூறியபடி சுஜாவுடன் வாழமுடியாமல் தவிக்கின்றார்.

வாசுதேவன் தன்னுடைய நிலையைச் சுஜாவுக்கு விளக்கியுரைக்கின்றார். அவருடைய கூற்று அவளுக்கு ஏமாற்றத்தையளிக்கிறது. அந்த ஏமாற்றத்திற்காளான சுஜா வேறு ஒருவனைத் தன் வாழ்க்கைத்துணையாக ஏற்றுக் கொள்ள வேண்டுமென்று எண்ணவில்லை. வாசுதேவனுடன் வாழ வாய்ப்பில்லையென்றவுடன் அந்த ஊரில் வசிக்க விரும்பாமல் தன் வேலையையும் விட்டுவிட்டு வேறு ஊருக்குப் புறப்பட்டு செல்கிறாள். இதனை ஆசிரியர் “ஊரைவிட்டு போயிடலாமென்ற முடிவுக்கு வந்திருக்கிறேன்”[5] என்று சுஜாவின் வாயிலாக கூறுகின்றார். அவள் பணிபுரிகின்ற சூழ்நிலையில் வேறு ஒருவரை வாழ்க்கைத் துணையாகத் தேர்ந்தெடுத்திருக்கலாம். ஆனால் அவள் உள்ளம் வாசுதேவனைத் தவிர யாரையும் ஏற்றுக் கொள்ள வில்லை.

தற்காலத்தில் பெண்கள் பலருடன் நெருங்கிப் பழகினாலும் அவர்களுடைய மனஉறுதி சற்றும் தளர்ந்து விடுவதில்லை. தங்கள் உள்ளம் விரும்பிய ஒருவரையே கணவனாக அடைய வேண்டும் என்றும் இல்லையெனில் திருமணமே செய்து கொள்ளாமல் இருந்து விட வேண்டுமென்று மன உறுதியுடனிருக்கின்றனர். சுஜா சங்கருடன் நெருங்கிப் பழகுகின்றாள். அவனைத் தன் நண்பனாகவே கருதுகின்றாள். ஏமாற்றத்தை ஏற்றுக் கொண்ட பின்பும் ஊரைவிட்டு வெளியேறும் போதும் ஒரு நல்ல நண்பனாகவே இருந்து உதவ வேண்டும்மென்று சுஜா சங்கரைக் கேட்டுக் கொள்கிறாளே தவிர அவள் உள்ளத்தில் வேறெந்தச் சலனமும் தோன்றவில்லை. இவ்வாறு ஆசிரியர் மணமாகாத ஒரு பெண்ணின் கற்பு நெறியை எடுத்துக் காட்டுகின்றார்.

ஒரு பெண் தான் விரும்பிய ஆடவனிடம் எத்தகைய குறைபாடிருந்தாலும் அதற்காகப் பிறிதொரு ஆடவனைத் தேடிச் செல்வதில்லை. இறுதிவரை அவனுடன் வாழவேண்டுமென்று மனஉறுதியுடன் வாழ்கிறாள். வேறொரு ஆடவனை மனத்தாலும், எண்ணிப் பார்ப்பதில்லை. இதுதான் தமிழ்நாட்டுப் பெண்களின் கற்பு நெறியாகும். வாசுதேவன் வயதில் முதிர்ந்தவர், திருமணமானவர், இவ்வளவு குறைகளிலிருந்த போதும் சுஜா அவருடன் மட்டுமே வாழ விரும்புகிறாள். பிறிதொருவரை நினைத்துப் பார்க்கவும் மறுத்து விடுகிறாள். உயர்ந்த நிலையிலுள்ளவள் சுஜா. அவள் விரும்பினாள் அவளுக்குச் சமமான உயர்ந்த சமமான வேலையில் உள்ள

ஆடவனை மணந்து கொள்ளலாம். ஆனால் வாசுதேவன் ஒருவனை மட்டுமே நினைத்து அந்த நினைவுடனேயே வாழ்ந்து விடுவதாக அவள் முடிவெடுக்கின்றாள்.

**நாற்குண மகளிர்**

பெண்கள் அச்சம், நாணம், மடம், பயிர்ப்பு என்னும் நான்கு குணங்களுடன் விளங்குவதையே கற்பு என்று தமிழ்ப் பண்பாடு கூறும். பிற ஆடவர்கள் தன்னை நெருங்குவதை அருவருப்புடன் வெறுத்து ஒதுக்குகின்ற குணமே 'பயிர்ப்பு' என்பதாகும். சிறுவயதிலிருந்தே சுஜா பயிர்ப்பு என்னு குணத்துடன் விளங்குகிறாள். அவருடைய கற்பு நெறிக்கு இதுவும் ஒரு சான்றாகும். சுஜா பள்ளியில் படிக்கும் போது சில இளைஞர்கள் அவளைக் கேலி பண்ணியதற்காக அவர்களை அடித்து விடுகிறாள். இதனை "முந்தா நாள் காலேஜ்லேந்து திரும்பி வர்றப்ப இரண்டு சகாக்களையும் சேர்த்துக்கிட்டு பக்கத்திலே வந்து நின்னு ஒஹோ எந்தன் டார்லிங். . . . இங்கு வாராய் எந்தன் டார்லிங்னு கண் அடிச்சு பாடினான். தாங்க முடியாம போயிடிச்சு . . . படவா ராஸ்கல் யாருக்கு யார்டா டார்லிங்னு கேட்டு கன்னத்தில் நல்லா ஒண்ணு கொடுத்தேன்"[6] என்ற சுஜாவின் கூற்று மணமாகாத பெண்ணின் கற்பு நெறியைத் தெளிவுறுத்துகிறது. இப்படிப்பட்ட இளைஞர்களின் தூண்டுதலில் மனஉறுதி தளர்ந்து விடுகின்ற பெண்களுமுண்டு. ஆனால் சுஜா சிறுவயதிலிருந்தே மனவுறுதியுடன் காணப்படுகிறாள்.

### மானமுள்ள மகளிர்

பெண்களில் சிலர் சந்தர்ப்ப சூழ்நிலையினால் தன்னுடைய பெண்மைக்கு இழுக்கு ஏற்பட்டால் தங்கள் உயிரையே மாய்த்துக் கொள்கின்றனர். நிகழ்ந்து விட்ட குறையை விடுத்து வேறு ஒரு புதுவாழ்வினை தேட முடிவு செய்வதில்லை. பெற்றோரை இழந்து விட்ட தனம் தன் தம்பியுடன் தன்னுடைய அத்தை வீட்டுக்கு சென்று விடுகிறாள். அவர்கள் வீட்டில் வேலைகளனைத்தையும் செய்து பிழைக்கின்றாள்.. அவளுடைய அத்தை வெளியூருக்குச் சென்றிருந்த நேரத்தில் அவள் மாமா தணிகாசலம் அவளிடம் நெறியற்ற முறையில் நடந்து கொள்ள முயற்சிக்கின்றாள். தனம் மறுத்து விடுகிறாள். பின்னர் அவரிடம். எவ்வளவோ கெஞ்சி மன்றாடுகிறாள்.

தணிகாசலம் சந்தர்ப்ப சூழ்நிலையைத் தனக்கு ஏற்றவாறு பயன்படுத்திக் கொள்கிறார். தனக்கு இ.ணங்கினால் தான் அவள் தம்பி பாலுவை பட்டப்படிப்பு படிக்க வைப்பேன். இல்லையெனில் அவன் கல்விக்குத் தடையேற்படும் என்று தனத்திடம் கூறுகிறார். தம் தம்பியின் கல்வியையும் எதிர்காலத்தையும் எண்ணி வேறு வழியின்றி உடன்படுகிறாள். இதன் விளைவாக தனம் தாய்மைப் பேறடையும் நிலையை எய்துகிறாள். இதையறிந்து தணிகாசலத்தின் மனைவி அவளுடைய தங்கை காந்திமதி வீட்டிற்குத் தனத்தை அனுப்பி விட்டாள். மற்றவர்கள் வலியுறுத்தியும் தணிகாசலத்தைப் பற்றி வெளியில் கூற தனம் மறுத்து விட்டாள்.

தனம் தாய்மைப் பேறடைந்த பின்னரும் அதற்குக் காரணமானவரான தணிகாசலத்தின் பெயரை வெளியிடவில்லை. “அத்தையிடம் சொல்லாதே உண்மை வெளிப்பட்டால் கயிற்றில் தொங்கி விடுவேன்”[7] என்று தணிகாசலம் தன்னுடைய காலில் விழுந்து கெஞ்சியதை எண்ணிப் பார்க்கின்றாள். மேலும் இத்தனை வருசங்களாய் வளர்த்து ஆளாக்கினவரைக் காட்டிக் கொடுத்திருந்தா அப்புறம் நான் ஒரு மனுஷிதானா”[8] என்பதையும் சிந்தித்துத் தன்னுடைய இந்த நிலைமைக்குக் காரணமானவரை வெளியில் கூறமறுத்து விடுகிறாள்.

இறுதியில் குழந்தையை அநாதை விடுதியில் விட்டுவட முடிவெடுக்கின்றனர். இந்த முடிவை தனத்திடம் அவள் தம்பியே கூறுகிறான். தன்னுடைய நிலைமையை வெளியில் கூற முடியாததாலும், தன் பெண்மைக்கு அவதூறு ஏற்பட்டு விட்டதாலும் தனக்கொரு முடிவைத் தேடிக் கொண்டாள். அவள் சமுதாயத்தில் பெண்களின் வாழ்க்கையில் தவறு நிகழ்ந்து விட்டால் அவர்களுக்கு மன்னிப்பென்பது கிடையாது. புதியதொரு வாழ்வோ, மறுவாழ்வோ நினைத்துப் பார்க்க முடியாத ஒன்றாகும்.

சமுதாயத்தில் எந்த ஒரு தவறுக்கும் பெண்தான் தண்டனையை அனுபவிப்பர். சந்தர்ப்ப சூழ்நிலையினால் கூட ஒரு பெண் நெறி தவறி நடந்து விடக் கூடாது. அவள் தவறிழைப்பதற்கான சூழ்நிலையைப் பற்றிச் சிந்தித்துப் பார்க்க மறுத்து விடுவது மட்டுமல்லாமல் அவள் மறுவாழ்வு அமைத்துக் கொள்வதையும் எதிர்க்கின்றது இந்த சமுதாயம்.

**தண்டனை பெறும் மகளிர்**

நிகழ்கின்ற ஒழுக்கக் கேட்டிற்கு ஆணும், பெண்ணும் சரிசமமாகவே காரணமாகின்றனர். எனினும் தண்டனை கிடைப்பது பெண்ணுக்குத்தான். இதனை சிவசங்கரி "பெண்களுக்கு இரும்பு வம்பு தும்பெல்லாம் ஆண்களுக்கு ஏது? தப்போ, சரியோ என்ன செய்தாலும் மாட்டிக் கொண்டு முழிக்கிற அவஸ்தை ஆண்களுக்குக் கிடையாது தானே"[9] என்று 'தான் தன் சுகம்' என்னும் நாவலில் தெளிவுறுத்துகிறார்.

ஒரு பெண் தன் பெண்மைக்கு களங்கம் ஏற்பட்டு விட்டால் இந்த சமுதாயத்தில் அமைதியாக வாழ இயலாது. எனவே அவளுக்கு மரணம் ஏற்படுவதே சிறந்த முடிவென்று ஆசிரியர் கருதுகின்றார். கற்பிழந்த பெண் என்ற பட்டம் கிடைத்து விட்டால் அவள் வாழ்வதற்கு வழி ஏதும் கிடையாது. எனவே அப்படிப்பட்ட பெண்ணிற்கு மரணத்தைக் கொடுத்து விடுகிறார் சிவசங்கரி. ஆனால் ஜெயகாந்தன் தனது படைப்புகளில் கற்பிழந்த பெண்களுக்கும் வாழ்வளிக்கின்றார்.

ஜெயகாந்தன் தமது 'அக்னிப் பிரவேசம்' என்ற கதையிலும் 'சில நேரங்களில் சில மனிதர்கள்' என்ற நாவலிலும் சந்தர்ப்ப சூழ்நிலையினால் தவறு நிகழ்ந்து விட்ட போதிலும் அந்நிலைக்குரிய பெண்ணிற்கு வாழ்வளிக்கின்றார். அந்தப் பெண்ணின் தாய் ஏற்பட்டு விட்ட கறையை மறைத்து, அப்பெண்ணிற்குப் புதிய ஞானம் தந்து, புதிய வலிமையும் தந்து

அவளை வாழவைக்கிறாள். ஒரு பெண் விரும்பாமல் களங்கப்பட்டு விட்டால் அதற்கு அவள் பொறுப்பல்ல. ஆகவே அவளுக்கு மரணம் தான் தீர்வு என்று கூற முடியாது என்று ஜெயகாந்தன் கூறுகிறார்.

"பிரச்சனைகளுக்கெல்லாம் மரணம் தான், தற்கொலைதான் அல்லது கொலைதான் தீர்வு என்றால் பேனாவை, இலக்கியத்தை, அறிவை, மனச்சாட்சியை சட்டத்திட்டங்களை, சமூக நெறிகளை எல்லாம் தூக்கி எறிந்து விட்டு அரிவாளைத் தூக்கிக் கொள்ளலாமே"[10] என்று ஜெயகாந்தன் தமது 'சுயதரிசனம்' என்னும் சிறுகதைத் தொகுப்பின் முன்னுரையில் கூறியுள்ளார். அவர் கூறியதற்கேற்ப கறை படிந்த பெண்யையும் வாழ வைத்திருக்கிறார் ஜெயகாந்தன் களங்கப்பட்டு விட்ட பெண்ணை அவள் அன்னை குளிர்ந்த நீரில் நீராட்டி கறையெல்லாம் நீங்கி விட்டதாகவும் கூறுகிறாள்.

"தெருவில் நடந்து வரும்போது எத்தனை தடவை அசிங்கத்தைக் காலிலே மிதிச்சுடறோம். அதுக்காக காலையா வெட்டிப் போட்டுடறோம். கழுவி விட்டு பூஜை அறைக்குக் கூடப் போறோமே. சாமி வேண்டாம்னு வெரட்டவா செய்யறார். எல்லாம் மனசுதாண்டி, மனசு சுத்தமா இருக்கனும்"[11] என்று அவள் அன்னையின் வாயிலாக ஜெயகாந்தன் தமது 'அக்கினி பிரவேசம்' என்னும் கதையில் கூறுகின்றார்.

உடலால் கறைபட்டு விட்ட பெண் இந்த சமுதாயத்தில் வாழ முடியாது என்பதால் அவள் இறந்து விடுவதாகக் கூறிய ஆசிரியர் மணமாகாத பெண் மனத்தால் நெறி பிறழ்ந்து விடுகின்ற நிலையையும் எடுத்துரைக்கின்றார். இந்நிலையைக் ‘காற்றுள்ள போதே’ என்னும் நாவலில் காணலாம். தற்காலத்தில் பெண்கள் பொருளாதாரத்திற்குத் தான் முதலிடம் அளிக்கின்றனர். வசதிக்கேற்றவாறு தங்கள் மனதையும் மாற்றிக் கொள்கின்றனர்.

**காதலைத் தியாகம் செய்யும் மகளிர்**

ஒரே அலுவலகத்தில் பணிபுரிகின்ற செந்திலும், வேணியும் ஒருவரை ஒருவர் விரும்புகின்றனர். இருவரும் திருமணம் செய்து கொள்ளவும் முடிவு செய்துள்ளனர். வேணியின் அக்கா சிவகாமியின் திருமணம் முடிந்தால் தான் வேணிக்கு ஒரு வழி பிறக்கும். இதையுணர்ந்த செந்திலும் அவளுக்காகக் காத்திருக்கின்றான். இருவரும் திருமணம் செய்து கொள்ளப் போவது உறுதியென்பதால் அவனுடன் வேணி மிகவும நெருக்கமாகப் பழகுகிறாள். “செந்திலுக்கு இன்னிக்கு பிறந்த நாள் மேட்னி ஸோவுக்கு படத்துக்கு போகலாம்னு ரெம்ப ஆசையா கூப்பிட்டார். வரலைனு சொல்ல மனசு வரலை, போனேன்”[12] என்று வேணி கூறுவதிலிருந்து அவர்களுடைய காதலைப் புரிந்து கொள்ள முடிகிறது. ஆனால் சிவசங்கரியின் வேணியுடைய திருமணம் தள்ளி வைக்கப்படுகிறது. வேணி கெட்டிக்காரி, ஓரளவு சுயநலம் உடையவளும் கூட,

ஓராண்டு காத்துப்பார்ப்பாள். அதற்குள் எதுவும் நடக்காவிட்டால் கண்டிப்பாய் வீட்டைவிட்டு வெளியேறியாவது செந்திலுக்குப் பொண்டாட்டியாகி விடுவாள். தனியாய் சினிமா அங்கே இங்கே போகும் அளவுக்கு வளர்ந்து விட்டதால் இனி எதைச் செய்யத்தான் தயங்காது?"[13] என்று ஆசிரியர் கூறுவதிலிருந்து வேணியின் காதல் வெளிப்படுகிறது. இவ்வாறெல்லாம் பழகி காதலித்த வேணி இறுதியில் தன் அக்காவிற்காக வந்த வரனை மணந்து கொள்கிறாள்.

சிவகாமியைப் பெண் பார்க்க வந்த குமார் வேணியைப் பிடித்திருப்பதாகக் கூறி விடுகிறான். பெண் வீட்டார் அனைவருக்கும் இது ஒரு அதிர்ச்சியாக அமைந்து விடுகிறது. எனினும் வேணி இந்தத் திருமணத்திற்கு ஒப்புதல் அளித்து விடுகிறாள். ஓராண்டுக்கும் மேலாய் தூய அன்பில் திளைத்து, காதலில் சிலிர்த்து ஆண்மகன் செந்திலுடன் வாழவேண்டுமென்ற எண்ணத்தையும் ஒரு நொடியில் மறந்து விட்டாள் வேணி. குமாருக்குள்ள வசதிக்கு அவள் முதலிடமளிக்கிறாள். இரண்டாயிரத்து நானூறு சம்பளம், வீடு, கார் இவற்றையெல்லாம் சிந்தித்து குமாரை மணந்து கொள்ளச் சம்மதித்து விடுகிறாள் வேணி.

தந்தையின் துன்புறுத்தலுக்கு அஞ்சி இத்திருமணத்திற்கு ஒப்புதல் தந்து விட்டாள் என்று ஐயத்துடன் வினவிய குடும்ப நண்பர்களிடம் வேணி பரிந்துரைக்கின்றாள். "அப்பா ஏன் சார் என்னை மிரட்டனும்? அவர் சொன்னதையெல்லாம் யோசனை பண்ணிப் பார்த்தேன். மெய்யா அத்தனையும்

எனக்கு நல்லதை தரும்னு புரிஞ்சது. வாழ்க்கையிலே இந்த மாதிரி சந்தர்ப்பங்கள் அடிக்கடி வராது. அவர் சொன்னதை ஏத்துக்கிட்டு மனப்பூர்வாகத்தான் சரினு சொல்லி இருக்கேன்"[14] என்று வேணி கூறுவதிலிருந்து அவளுடைய மண உறுதியைப் பற்றித் தெரிந்து கொள்ள முடிகிறது.

அழகான தோற்றமுள்ள செந்திலை விட்டுவிட்டு அம்மை வடுக்கள் நிறைந்த குமாரை மணக்க மனப்பூர்வமாக சம்மதித்து விடுகிறாள். "கடைசியில் சட்டையை கழற்றி மாற்றிக் கொள்கிற மாதிரி மனதையும் நொடியில் மாற்றிக் கொண்டு காற்றுள்ளபோதே தூற்றிக் கொள்வது மட்டும் தான் என் இலட்சியம் வேறு எதுவும் இல்லை என்று திட்டவட்டமாய் சொல்லிக் காட்டி விட்டாளே"[15] என்று ஆசிரியர் கூறுவதிலிருந்து பெண்களின் மனம் உறுதியானதில்லை எனப் புலனாகின்றது. கற்பு என்பது மன உறுதியைத் தான் குறிக்கின்றது. தற்காலத்தில் உடல் களங்கப்பட்டு விட்டாலும் உள்ளம் உறுதியானதாய் இருக்க வேண்டுமென்று கருதுகின்றனர்.

உடலில் கறை படிந்ததால் தற்கொலை செய்து கொள்கின்ற பெண்களைப் பற்றி ஆசிரியர் வேணி போன்ற பெண்களையும் காட்டுகிறார். இன்றைய சமுதாயத்தில் பெண்கள் பெரும்பாலும் பொருளாதார வசதியை எண்ணி தாம் நெருங்கிப் பழகிய ஆடவனை விடுத்துப் பிறிதொருவனை மணக்க முன் வருகின்றனர். சுயநலத்திற்காக மனஉறுதியைக் கைவிட்டு

விடுகின்றனர். இதுதான் இன்றைய மணமாகாத பெண்களின் கற்பு நெறியாகக் காணப்படுகிறது.

"தற்கொண்டான் பேணி"[16] என்ற வள்ளுவர் வாக்கிற்கேற்ற கற்பு நெறி தவறாத பெண்ணையும் ஆசிரியர் தமது 'திரிவேணி சங்கமம்' என்ற புதினத்தில் காட்டுகிறார். கணவன் இழைக்கின்ற கொடுமைகளைப் பொறுத்துக் கொண்டு இறுதிவரை மனஉறுதியுடன் வாழ்கின்ற பெண்களையும் சிவசங்கரி தமது 'வெட்கங்கெட்டவர்கள்' என்ற புதினத்தில் காட்டுகிறார்.

தன்னுடைய கணவன் வேறொரு பெண்ணை நாடிச் சென்றாலும் தன்னந்தனியாக வாழ்ந்து வேறொருவனை பற்றிச் சிந்திக்காமல் வாழ்கின்ற கற்பு நெறி தவறாத பெண்ணாக புவனா கதாப்பாத்திரத்தைப் படைத்துள்ளார் ஆசிரியர். அலுவலகத்தில் பணிபுரியும், புவனா மறுமணத்தைப் பற்றி எண்ணிப் பார்க்கவில்லை. பெண்கள் தனித்து வாழ்ந்தால் அவர்களைப் பழிதூற்றுகின்ற இச்சமுதாயத்தில் புவனா தனியாக வாழ்ந்து வருகிறாள்.

**ஆடவரை நண்பராகக் கருதும் மகளிர்**

தற்காலத்தில் மணமுறிவு ஏற்பட்டு விட்டாலும் பெண்கள் மறுமணம் செய்து கொள்ள வாய்ப்புண்டு. அதிலும் அலுவலகத்தில் பணிபுரியும் பெண்களுக்கு மறுமணம் செய்து கொள்வதென்பது அரிய காரியமில்லை. செல்வந்தரின் மகள் சாருவுக்கும் சுரேஷ்க்கும் திருமணம் நடைபெறுகிறது. அவர்களுடைய இல்லற வாழ்வில் சுரேஷ் ஒரு விலங்கு போல் நடந்து

கொள்கிறான். பலவகையான கெட்டபழக்கங்களுக்கும் அடிமையாகிறான். இதற்கு மேலும் அவனோடு வாழமுடியாது என்ற நிலையில் சாரு சட்டப்படி மணமுறிவு பெற்று விடுகிறாள். அதன் பின்பும் தன்னுடன் பணிபுரியும் எந்த ஆடவனையும் நண்பனாகவே எண்ணிப் பழகுகிறாள் சாரு.[17]

அலுவலகத்தில் பணிபுரியும் பாஸ்கர் சாருவுடன் நெருங்கிப் பழகுகிறான். நண்பனாகப் பழகிய அவன் சாருவை மணக்க விரும்புகிறான். தன் விருப்பத்தை அவளிடம் தெரிவிக்கிறான். ஆனால் சாரு “ ஐம் சாரி பாஸ் . . . . . உன்னை நா வேற எந்தக் கண்ணோட்டத்துலேயும் பார்த்ததில்லே”[18] என்று பதிலுரைக்கிறாள். பாஸ்கர் தானே முன்வந்து அவளை மணந்து கொள்ள விரும்புகிறான் என்றாலும் அவளுடைய உள்ளம் அதனை ஏற்றுக் கொள்ள மறுக்கிறது. அவனை நண்பனாகத்தான் இறுதிவரை எண்ணுகிறாள். மறுமணம் செய்து கொள்ள ஒரு பெண்ணுக்கு இதை விட நல்ல வாய்ப்புக் கிடைப்பது அரிது எனினும் மனஉறுதி தளராமலிருப்பதால் பாஸ்கரனைச் சாரு நண்பனாகவே ஏற்றுக் கொள்கிறாள். “ சென்ற நாலாம் வருஷம் பாங்க் வேலையை விட்டுவிட்டு தனியார் நிறுவனம் ஒன்றில் ஜி.எம். ஆகப் பதவியேற்று விட்டாலும் இன்னும் சாருவுக்கு அவன் அருமையான நண்பன்தான்”[19] என்று ஆசிரியர் சிவசங்கரி கூறுவதிலிருந்து சாருவின் உள்ள உறுதியைப் புரிந்து கொள்ள முடிகிறது. அவளுடைய மனம் சலனமடைந்திருந்தால் பாஸ்கரை மறுமணம் செய்திருப்பாள். என்ன தான்

முயன்றும் இன்னொரு கல்யாணத்துக்கு அவள் ஆயத்தமாகவில்லை. முதலில் நடந்த திருமணமே சாருவின் மனத்தில் ஆழமாகப் பதிந்து விட்டது. ஒருவனுடன் சிறிது காலம் வாழ்ந்தாலும் அவ்வாழ்க்கையை ஒரு பெண்ணால் மறக்க முடியவில்லை. எனவேதான் பாரதப் பண்பாடு ஒருவன் ஒருத்தி மரபை வலியுறுத்துகிறது.

**சபல மகளிர்**

திருமணமான பெண்கள் அனைவருமே மனஉறுதியுடனிருந்து கற்புடன் வாழ்வார்கள் என்று கூற முடியாது. திருமணமான பின்பும் கணவனை விடுத்து வேறொரு ஆடவனை நாடிச் செல்லும் பெண்களும் உள்ளனர். இதனைச் சிவசங்கரி தமது ‘திரிசங்கு சொர்க்கம்’ என்னும் நாவலில் எடுத்துரைக்கின்றார். பெண்களுக்குப் பல காரணங்களால் மனத்தில் சலனங்கள் தோன்றும். இன்றைய சமுதாயத்தில் பெண்களும் அலுவலகங்களுக்குச் சென்று பணிபுரிகின்றனர். அவர்கள் ஆண்களுடன் பழகுவதற்கு வாய்ப்புகள் மிகுதியாக உள்ள நிலையில் பெண்களின் மனஉறுதி கெடுவதற்கும் வாய்ப்புக்கள் மிகுதி.

அலுவலகத்தில் பணிபுரியும் கமலிக்கும் மனோகர் என்னும் ஒரு வியாபாரியுடன் தொடர்பு ஏற்படுகிறது. ஒவ்வொரு நாளும் பேச ஆரம்பித்த கமலி மனோகர் உடன் பல இடங்களுக்குச் சுற்ற ஆரம்பித்து மிகவும் நெருங்கி விட்டாள் கமலி. அவள் தன் கணவன் முரளி எடுத்துச் சொல்லியும் கேட்கவில்லை. மனோகர் ஆலோசனைப்படி சென்னைக்கு மாற்றல் வாங்கிக்

கொண்டு தன் தாலியை கழற்றி வைத்து விட்டு கடிதமும் எழுதி வைத்து விட்டு மனோகருடன் சென்று விடுகிறாள்.

முரளியுடன் இல்லறம் நடத்தும் போதே மனோகருடன் தொடர்பு கொண்டதற்காக கமலியைக் கண்டிக்கிறான் அவள் கணவன். ஆனால் அவள் உள்ளம் மனோகரனைத்தான் நாடியது.

"தலைகாணியுடன் எழுந்து கூடத்து சோபாவில் படுத்த போது நெஞ்சுபூராவும் மனோகரின் நினைப்பு இதமாக அலைமோத முற்பட்டது"[20] என்று ஆசிரியர் கூறுவதிலிருந்து கமலியின் மனத்தில் ஏற்பட்ட சலனத்தை அறியமுடிகிறது. உறுதியில்லாமல் உள்ளம் அலைபாய்ந்ததால்தான் கணவனை விடுத்து வேறொருவனுடன் செல்கிறாள். திருமணமான பின்னர் கணவருடன் மட்டுமே வாழக் கூடிய மன உறுதியை இழந்து விட்டாள் கமலி.

மணமான பெண்கள் தம் கணவருடன் மட்டுமே சேர்ந்து வாழ்ந்து மன உறுதியுடன் கற்பு நெறி தவறாமல் வாழ்வதாகவும் அலுவலகத்தில் பணிபுரியும் பெண்களாயிருந்தால் பிற ஆடவர்களை நண்பராக எண்ணிப் பழகுவதாகவும் ஆசிரியர் 'வெட்கம் கெட்டவர்கள்' என்ற புதினத்திலும் 'பாலங்கள்' என்ற புதினத்திலும் எடுத்துரைக்கின்றார். மணமான பெண் கற்பு நெறி தவறி நடப்பதை 'திரிசங்கு சொர்க்கம்' என்ற புதினத்தில் கூறுகிறார்.

**பெண்களின் வாழ்க்கை முறை**

"பரிந்தோம்பிக்' காக்க ஒழுக்கம் தெரிந்தோம்பித்

தேரினும் அஃதே துணை"[21]

என்ற வள்ளுவர் கூற்றின்படி பெண்கள் ஒழுக்கத்துடன் வாழ வேண்டுமென்று நம் சமுதாயம் எதிர்பார்க்கிறது. ஒழுக்கம் தவறாத பெண்களால்தான் சமுதாயத்தில் கௌரவமாக வாழ முடியும். சமுதாய மரபுப்படி ஒழுக்கம் என்பது ஒரு பெண் ஆணுடன் நெறிப்படி இறுதிவரை சேர்ந்து வாழ வேண்டும்.. அப்படியில்லாமல் தன் விருப்பப்படி ஆடவர் பலருடன் சேர்ந்து வாழ்வாளேயானால் அவள் ஒழுக்கங் கெட்ட பெண்ணாகக் கருதப்படுவாள்.

தற்காலத்தில் பெண்கள் பலர் சூழல் காரணமாக நெறி பிறழ்ந்து விடுகின்றனர். அச்சூழல்களைச் சிவசங்கரி தமது நாவல்களில் விளக்கமாக எடுத்துரைக்கின்றார். பெண்களின் ஒழுக்கமின்மைக்கு வறுமை ஒரு காரணமாகின்றது. குடும்பச் சூழலினாலும், கட்டுப்பாடின்மையாலும் பெண்கள் ஒழுக்கத்தினின்று தவறிவிடுகின்றனர்.

**வறுமையினால் ஒழுக்கமின்மை**

பெண்கள் சிலர் வறுமையின் கொடுமையினால் ஒழுங்கான வாழ்க்கையினின்று தவறி விடுகின்றனர். இந்நிலையைச் சிவசங்கரியின் 'பயிரை மேய்ந்த வேலிகள்' என்னும் புதினத்தில் காணலாம். காந்தம் சிறுவயதிலேயே கணவனை இழந்து விடுகிறாள். கையில் ஒரு குழந்தை கணவனை இழந்தபின் அன்னையையும் இழந்து விடுகிறாள். "இளவயதுப் பெண், ஐந்து வயதுக் குழந்தை சாய்ந்து கொண்டு நிற்க மனசு பலம் இல்லாத சூழ்நிலை, முக்கியமாக பணமும் இல்லை"[22] என்று காந்தம் எவ்வாறு வறுமையினால் துன்பப்படுகிறாள் என்பதை ஆசிரியர் படம் பிடித்துக் காட்டுகிறார்.

வறுமையான சூழ்நிலையில் திரைப்படத்தில் நடித்தால் வாழ்க்கையில் முன்னேறி விடலாம் என்று செல்லம்மா என்பவள் கூற அத்துறையில் புகுந்து விட முயன்றாள் காந்தம் "ரம்பை ஊர்வசி என்று புகழ்ந்தவர்களெல்லாம் அவளைச் செம்மையாக அனுபவித்தார்களே ஒழிய உருப்படியாய் ஒரு நல்லதைச் செய்யவில்லை"[23] என்று காந்தத்தின் வாழ்க்கை எவ்வாறு நெறிகெட்டது என்பதை ஆசிரியர் தெளிவுறுத்துகிறார்.

ஒழுக்கமில்லா வாழ்க்கையைக் காந்தம் விரும்பி ஏற்றுக்கொள்கிறாள். தன்னுடைய மகள் விமலாவும் அம்மாதிரியான வாழ்க்கையை ஏற்றுக் கொள்ள வேண்டுமென்று வற்புறுத்துகிறாள். காந்தத்துடன் தொடர்பு கொண்டே வேலு

விமலாவிடம் முறை தவறி நடக்க முயல்கிறான். இதனை விமலா தன் அன்னையிடம் தெரிவிக்கிறாள். சீற்றம் கொள்ள வேண்டிய காந்தம் அதனை ஆதரிக்கிறாள். நமக்கெல்லாம் இந்தப் பத்தினி வேஷம் தோதுபடாது"[24] என்று கூறுகிறாள். அவளே தன் ஒழுக்கமின்மையை உணர்ந்து பேசுகிறாள். "நம்முடைய உண்மையான தன்மையை விட்டுவிட்டு

வேஷம் போட வேண்டாம்" என்று கூறுகிறாள். அதாவது பத்தினாயாய் இருப்பது காந்தத்தை பொறுத்தவரை ஒரு வேஷம் தான். வறுமையின் பிடியிலிருந்து தப்பிப்பதற்கு முதன்முதலில் ஒழுங்கு தவறியவள். இதுவே தனது வழக்கமான வாழ்க்கை என ஆக்கிக் கொண்டுவிடுகிறாள்.

**அலைபாயும் உள்ளத்தால் ஒழுக்கமின்மை**

இக்காலச் சமுதாயத்தில் நிலவும் சூழலும் ஒரு பெண்ணை ஒழுங்கற்ற வாழ்க்கைக்கு இழுத்துச் செல்கிறது. இந்நிலையைச் சிவசங்கரியின் 'பயிரை மேய்ந்த வேலிகள்' என்னும் புதினத்தில் காணலாம். குருவின் தந்தை அலுவலகத்தில் பணிபுரிபவர் அவர் தன் மனைவியைப் பல இடங்களுக்கு அழைத்துச் செல்வார். "அப்பா மெம்பராக இருக்கும் க்ளப்புக்கு சென்று அவர் சீட்டாடினால் கூட உட்கார்ந்து அம்மா வேடிக்கை பார்க்க. . . . அப்படிப்போய் உட்கார்ந்திருந்த ஒரு நாளில்தான் ராஜ்மோகனின் சிநேகம் அம்மாவுக்குக் கிடைத்திருக்க வேண்டும்"[25] என்று குருமூர்த்தி கூறுகிறான்.

அதன் பின்பு குருவின் தந்தை இல்லாத நேரங்களில் ராஜ்மோகனும் அவளும் பல இடங்களுக்குச் சென்றனர்.

ஒரு பெண் ஒரு ஆணுடன் நட்புக் கொள்வது தவறல்ல. அவர்கள் நண்பர்களாக மட்டுமே பழக வேண்டும்.∴ கணவனுக்குத் தெரியாமல் பிறிதொருவருடன் ஒருத்தி தொடர்பு கொள்வது ஒழுக்கமின்மையாகும்.

நட்பு என்பது ஒழுங்கற்ற உறவில் முடியவேண்டும் என்பதில்லை. உள்ளத்தில் சலனம் ஏற்பட்டால், மட்டுமே ஒழுங்கின்மை தோன்றி விடுகிறது. குழுமூர்த்தியினுடைய அன்னையின் அலைபாயும் உள்ளத்தால் அவள் ஒழுக்கமின்றி நடந்து கொள்கிறாள்.

"ஒன்பது வயது பிள்ளையையும், தாலி கட்டினவனையும் விட்டுவிட்டுக் கள்ளக்காதலனுடன் பகிரங்கமாய் வாழ்க்கை நடத்தத் துணிந்து சென்றாள். அப்பா ஆபீஸிலும், இவன் பள்ளியிலும் இருந்த நாழிகையில் தன் துணி, நகை, பொருட்கள் என்று எல்லாவற்றையும் கச்சிதமாய் பெட்டிகளில் பாக் செய்து, இன்ன காரணத்தால் உங்களைப் பிரிந்து போகிறேன் என்று ஒரு கடிதம் கூட எழுதி வைக்காமல் புறப்பட்டுப் போய்ச் சேந்தாள்"[26] என்று குருமூர்த்தி கூறுகிறான். தன் கணவனிடம் குறையேதுமில்லாத போது கூட ஒருத்தி பிறிதொருவனுடன் ஒழுக்கமின்றிச் செல்கிறாள் என்றால் அவள் மனநிலை தான் அவளின் ஒழுக்கமின்மைக்குக் காரணம் ஆகும்.

**குடும்பச் சூழலினால் ஒழுக்கமின்மை**

குடும்பச் சூழலினால் ஒழுக்கமில்லாமல் வெட்கம் கெட்ட வாழ்க்கையை மேற்கொண்ட பெண்களைப் பற்றி ‘வெட்கம் கெட்டவர்கள்’ என்னும் நாவலில் எடுத்துரைக்கின்றார். புவனாவின் கணவன் குதிரைப் பந்தயத்தில் 1 இலட்சத்து இருபதினாயிரம் பெறுகிறான். இதையறிந்த

புவனாவின் சித்தி தன் மகள் சுந்தரியை வைத்துப் புவனாவின் கணவன் துரைசாமிக்கு வலை வீசுகிறாள். சுந்தரியும் அவள் அன்னையும் ஆடம்பரமாக வாழ்வதற்குப் பணம் தேவை. அது துரைசாமியிடம் இருக்கிறது. ஆகவே மூத்த மகள் சுந்தரியை வைத்துப் புவனாவின் கணவன் துரைசாமிக்கு வலை வீசுகிறாள்.

அனைவரும் ஒரே குடும்பமாய் வாழ்வதுதான் இங்கு ஒழுக்கமின்மையை ஏற்படுத்துகிறது. பணமும் ஒரு காரணமாகிறது. “இன்றைக்குப் பணத்துக்காக மூத்த மகளின் புருஷனுக்கே தன்மகளைக் கூட்டிக் கொடுக்கும் சித்தி, நாளைக்கு இதைவிட பணக்காரன் ஒருவன் மாட்டிக் கொண்டால் அவனிடமும பெண்ணை அனுப்ப ரெடியாய் நிற்பாளோ?”[27] என்று புவனா கூறுவதிலிருந்து இங்கு நிகழ்கின்ற ஒழுக்கமில்லா வாழ்ககைக்குப் பணம் காரணமாவதைப் புரிந்து கொள்ள முடிகிறது.

கூட்டுக் குடும்பமாக வாழ்ந்ததால் ஒழுங்கின்மை உருவாகுவதற்குச் சூழ்நிலைகள் எளிதில் காரணமாகின்றன. புவனா படிப்பதிலும், எதிர் காலத்தை எப்படி அமைத்துக் கொள்ள வேண்டும் என்ற நினைவுகளிலும் ஆழ்ந்து விட்டதால் தன்னைச்சுற்றி, நடப்பவைகளைச் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை. முதல் சில நாட்கள் புவனா கணவன், சித்தி சுந்தரியோடு வெளியிடங்களுக்குச் சென்று வந்தாள். நாட்கள் ஆக ஆகத் தேர்வுக்குப் படிக்க ஆரம்பித்து விட்டாள். அதனால் வெளியிடங்களுக்கு வரவில்லை என்று கூறி விட்டாள். வீட்டிலேயே தங்கத் தொடங்கி விட்டாள். யாரும் அவளை வற்புறுத்தவில்லை. இத்தகையதொரு சூழ்நிலையில்தான் சுந்தரி தன் அக்காவிற்குத் துரோகம் பண்ண ஆரம்பித்தாள். மணமாகாமலே துரைசாமியுடன் தொடர்பு கொண்டாள். இந்நிலைக்குக் குடும்பச் சூழலே காரணமாகும். தொடக்கத்திலேயே புவனா கவனமாக இருந்து தனிக்குடும்பமாக வாழ்ந்திருந்தால் இங்கு நிகழ்ந்த ஒழுங்கின்மையைத் தவிர்த்திருக்கலாம். புவனாவை அசடு என்பதா? வெகுளி என்பதா? எல்லாம் தான்”[28] என்று ஆசிரியர் கூறுகின்றார். இதிலிருந்து குடும்பச் சூழலும் பெண்கள் ஒழுக்கமில்லாமல் வாழ்வதற்குக் காரணமாகின்றன என்பதைத் தெரிந்து கொள்ள முடிகிறது.

**கட்டுப்பாடின்மையால் ஒழுங்கின்மை**

பெற்றோரில்லாத பெண் என்பதால் கமலியை அவள் அண்ணன் கண்டிக்காமல் வளர்க்கிறான். அவளும் கற்பனை உலகிலேயே வாழ்ந்து தனக்கென்று பணக்கார இடத்திலிருந்து அழகான மணமகன் தான் வருவான் என்று கனவு காண்கிறாள். அவளுடைய கனவுகளுக்குக் கட்டுப்பாடே கிடையாது. தன்னுடைய அழகில் அவளுக்கு கர்வமுண்டு. "அவள் அண்ணனும் அவளுடன் சேர்ந்து கொண்டாடக் கொண்டாட தான் என்கிற எண்ணம் கொம்பேறி மூக்கனாய் உச்சாணிக் கொம்பில் ஏறிக்கொள்ளவே செய்தது"[29] என்று ஆசிரியர் கூறுவதிலிருந்து கமலி ஒரு கட்டுப்பாடில்லாமல் மனம் போன போக்கில் வளர்கிறாள் என்பது புலனாகிறது.

கமலி கற்பனை செய்த அளவிற்குக் கணவன் வீடு அமையவில்லை. திருமணம் அவளுக்கு ஏமாற்றத்தையே அளித்தது. எனவே கணவனுடைய கட்டுப்பாட்டையும் மீறி அலுவலகத்திற்குப் பணி புரியச் செல்கிறாள். அங்கு மனோகர் என்னும் வியாபாரியோடு தொடர்பு கொண்டு கணவனுக்குத் தெரியாமல் மனோகருடன் நெறியற்ற முறையில் பழகுகிறாள். இறுதியில் கணவனை விட்டு விட்டு மனோகருடன் சென்று விடுகிறாள். ஒரு நாள் மனோகர் அவளுடைய ஒழுக்கங்கெட்ட வாழ்க்கையைச் சுட்டிக் காட்டுகிறான். "என்னைவிட பணக்காரனா! அழகானவனா ஒருத்தன் கிடைச்சா

ஒரு தரம் உருவிப் போட்டுட்டு வந்த மாதிரி இதையும் நீ விட்டெறிஞ்சுட்டு போக மாட்டேன்னு என்ன நிச்சயம்? . . . . பெரிய பத்தினி . . . . இவ”[30] என்று மிகவும் இழிவாகப் பேசுகிறான். அதன் பின்னர் தான் கமலிக்கு அவளுடைய ஒழுங்கின்மை புலனாகிறது.

கமலி ஒழுக்கம் தவறுவதற்குக் காரணம் அவள் கட்டுப் பாடில்லாமல் வளர்ந்தேயாகும். சிறுவயதிலிருந்தே அவளுடைய எண்ணங்களைக் கட்டுப்பாடில்லாமல் சிதறிவிட்டிருக்கிறாள். திரைப்படம் போல் கனவு கண்டு கற்பனை செய்ததால் அவள் ஏமாற்றத்தை எதிர் நோக்குகிறாள் கட்டுப்பாடில்லாத உள்ளத்தை அவளால் ஒருநிலைப் படுத்த முடியவில்லை. எனவே அவள் ஒழுக்கமான வாழ்வில் இருந்து பிறழ்ந்து விடுகிறாள்.

**முடிவுரை**

மணமாகாத பெண்ணின் கற்பு நெறியை விளக்கமாக எடுத்துரைக்கிறார் ஆசிரியர். மனதில் நினைத்தவருடன் வாழ்வது இல்லையெனில் வாழாமலிருப்பது என்ற உறுதியுடன் இருக்கின்ற பெண்ணின் நிலையைச் சிவசங்கரி தமது ‘கப்பல் பறவை’ என்னும் புதினத்தில் சித்திரிக்கின்றார். தன் உடலில் கறை ஏற்பட்டவுடன் வாழ்க்கையில் களங்கம் வந்தவுடன் தற்கொலை செய்து கொள்கிற பெண்ணையும் ஆசிரியர் அறிமுகப்படுத்துகிறார்.

கற்பே உயிரென எண்ணுகிற பெண்களுக்கிடையில் மன உறுதியில்லாத பெண்ணையும் ‘காற்றுள்ளபோதே தூற்றிக் கொள்கிற பெண்ணையும் படைத்துக் காட்டுகிறார் ஆசிரியர். பெண்களின் வாழ்க்கைமுறையைத் தெளிவுறுத்துகிறார். சிவசங்கரி தமது புதினங்களில் பெண்கள் ஒழுக்கம் கெட்டுவாழ்வதை மட்டும் எடுத்துரைக்கவில்லை. அதற்கான காரணங்களையும் ஆராய்ந்து அறிவுறுத்துகிறார். வறுமையின் கொடுமையினால் கணவனை இழந்த இளம் விதவை கலைத்துறையில் ஈடுபட்டு நெறிகெட்டு வாழ்வதை ஆசிரியர் எடுத்துக் காட்டுகிறார்.

கட்டுப்பாடில்லாததாலும், அளவு கடந்த கற்பனையாலும், மனம் அலைபாய்வதாலும் ஒரு பெண் ஒழுங்கற்றுப் போகிறாள் என்பதைத் ‘திரிசங்கு சொர்க்கம்’ என்னும் நாவலில் ஆசிரியர் எடுத்துரைக்கிறார். இவ்வாறு சமுதாயத்தில் பெண்கள் வாழ்க்கையில் ஒழுக்கக்கேடு நிகழ்வதற்கான காரணங்களைத் தெளிவாகப் புலப்படுத்துகிறார் ஆசிரியர்.

## சான்றெண் விளக்கம்

1. தொல்காப்பியர் – தொல்காப்பியம் - பொருளதிகாரம் - நூ-90
2. பாரதியார் – பாரதியார் கவிதைகள் - விடுதலைக்கும்மி –ப– 50
3. சிவசங்கரி – திரிவேணி சங்கமம் - ப – 61
4. மேலது
5. சிவசங்கரி – கப்பல்பறவை – ப – 209
6. மேலது – ப – 31
7. சிவசங்கரி – தான் தன் சுகம் - ப – 99
8. மேலது
9. மேலது – ப – 106
10. ஜெயகாந்தன் - சுயதரிசனம் - முன்னுரை – ப- 6
11. ஜெயகாந்தன் - அக்கினிப் பிரவேசம் - ப – 149
12. சிவசங்கரி – காற்றுள்ளபோதே – ப- 58
13. மேலது – ப – 65
14. மேலது – ப – 92
15. மேலது – ப – 93
16. திருக்குறள் - வாழ்க்கைத் துணைநலம் - செ . 6
17. சிவசங்கரி – பாலங்கள் - ப - 244

18. மேலது – ப – 245

19. சிவசங்கரி – திரிசங்கு சொர்க்கம் - ப- 92

20. சிவசங்கரி, தான்தன் சுகம், 40.

21. திருக்குறள், ஒழுக்கமுடைமை, செ.2.

22. சிவசங்கரி – பயிரைமேய்ந்த வேலிகள் - ப- 17

23. சிவசங்கரி, பயிரை மேய்ந்த வேலிகள்

24. மேலது – ப – 26

25. மேலது – ப – 7

26. மேலது – ப – 8

27. சிவசங்கரி – வெட்கம் கெட்டவர்கள் - ப- 81

28. மேலது – ப – 70

29. சிவசங்கரி – திரிசங்கு சொர்க்கம் - ப -15

30. மேலது – ப – 202

31. மேலது, ப.205.

# இயல் - 6

# பெண்கள் முன்னேற்றம்

**முன்னுரை**

இன்றைய மகளிர் உலகம் காலத்திற்கேற்பக் கோலங்கொண்டு மாறி வருவதைக் காண முடிகிறது. காலச் சுழற்சிக்கு ஏற்ப, மாதர் உலகும் காலந்தோறும் படிப்படியே மாற்றம் பெற்று வந்திருக்கிறது. இதற்கு ஏற்பத்தான் இக்கால மகளிரும் சமூக, பொருளாதார, கலாச்சார, சமய, அரசியல் அமைப்புக்களிலும் ஆணுக்குப் பெண் நிகரானவள் என்பதை நிறுவி வருகின்றனர்.

பெண்களின் முன்னேற்றத்திற்குத் தடையான சமுதாய மரபுகளைப் பற்றியும், பெண்களின் நிலை உயர்வதைப் பற்றியும் அவர்களின் உரிமையைப் பற்றியும், சிவசங்கரி புதினங்கள் வழிநின்று ஆய்வது இவ்வியலின் நோக்கமாகும்.

**பாரதியின் நோக்கு**

தொன்று தொட்டுப் பெண்கள் முன்னேற்றம் பெண்களின் விடுதலை என்பதெல்லாம் சமுதாயத்தில் சிந்தனைக்குரியனவாயிருந்தன. பெண்களின் நிலையை முன்னேற்றுவதற்காகப் பாடுபட்டார் பாரதியார். “ஏட்டையும் பெண்கள் தொடுவது தீமையென்றெண்ணியிருந்தவர் மாய்ந்து விட்டார்.

“வீட்டுக்குள்ளே பெண்ணைப் பூட்டி வைப்போமென்ற

விந்தை மனிதர் தலை கவிழ்ந்தார்”[1]

என்று பாரதியார் கூறுவதிலிருந்து பெண்கள் வீட்டிற்குள் பூட்டப்பெற்ற காலம் ஒன்று இருந்தும் என்பதும் இப்போது அது மறைந்து விட்டது என்பதும் தெளிவு ஆகிறது.

**கல்வியின் விளைவு**

சமுதாயத்தில் பெண்கள் முன்னேற்றமடைவதற்குக் கல்வியே உறுதுணை செய்கிறது. கல்வியின் நிலையை வைத்துப் பெண்களின் முன்னேற்றத்தைப் பற்றிக் கூறலாம். கல்வியின் உதவியுடன் பெண்கள் சொந்த முயற்சியிலேயே முன்னேறலாம். மணமான பெண்கள் கணவனின் கொடுமைகளை அனுபவித்துக் கொண்டு அடிமைகளாக வாழவேண்டுமென்பதில்லை. கல்வி கற்றுப் பெண்கள் சமுதாயத்தில் பல சிக்கல்களையும் எதிர்த்துப் போராடுவதற்குரிய திறமை படைத்தவர்களாயிருக்கின்றனர்.

**சிவசங்கரியின் கற்ற மகளிர்**

கல்வியினால் பெண்கள் முன்னேறியதைப் பற்றிச் சிவசங்கரி தமது நாவல்களில் விரிவாக எடுத்துரைக்கின்றார். வெட்கம் கெட்டவர்கள் என்னும் நாவலில் புவனாவின் கணவன் அவள் தங்கையை நாடுகின்றான்.

இதனையறிந்த புவனா தன் கணவனின் ஒழுக்கக் கேட்டினைப் பொறுத்துக் கொள்ள முடியாமல் தன் குழந்தையுடன் குடும்பத்தைவிட்டு வெளியேறி விடுகிறாள். அதன் பின் தன் கல்வியின் உதவியினால் சுயமாகப் பொருளீட்டித், தன் குழந்தையையும் நன்முறையில் வளர்க்கின்றாள்.

தன் சொந்த முயற்சியினால் முன்னேறிய புவனாவை அவள் தோழி பாராட்டி மடல் வரைகின்றாள். ‘‘ஆணுக்கு ஒரு நீதி, பெண்ணுக்கு ஒரு நீதி என்று இருக்கும் நம்நாட்டில், பெண்களை அடிமைகளாக, மனசு என்று ஒன்று இல்லாத ஜடமாகப் பல குடும்பங்களில் நடத்தி வரும் நம் நாட்டில் எதிர் நீச்சல் போட்டு, இன்று தன் சொந்த முயற்சியில் ஸ்திரமாய் வாழும் உன்னைப் போன்றவர்கள் அபூர்வம் தானே’’[2] என்று புவனாவின் தோழியின் வாயிலாக ஆசிரியர் பெண்களின் முன்னேற்றத்தைப் பற்றிக் கூறுகின்றார்.

பெண்கள் கல்வி கற்க வேண்டும், சொந்தமாகச் செயல்பட வேண்டும், குடும்பத்திலோ அல்லது சமுதாயத்திலோ பல சிக்கல்கள் உருவான போதிலும் அவற்றிற்குச் சிந்தித்துச் செயல்பட்டுத் தீர்வுகாண வேண்டும். பெண்களின் முன்னேற்றத்தின் அடிப்படையில்தான் சமுதாய முன்னேற்றம் அமைந்துள்ளது என சிவசங்கரி விரிவாக எடுத்துரைக்கிறார்.

**மரபு ஒரு தடை**

சமுதாய மரபுகள் பெண்களின் முன்னேற்றத்தைத் தடைசெய்வனவாய் அமைந்துள்ளன. சான்றாக விதவைகளும் பெண்களே, அவர்களுக்கும் விருப்பு, வெறுப்பு, ஆசைகள் போன்றவை உண்டு என்பதைப் பலர் சிந்திப்பதில்லை. இதனால் கணவனை இழந்த பெண்களுக்கு ஏற்படுகின்ற இன்னல்கள் எண்ணிலடங்கா. ‘‘சட்டம் விதவைத் திருமணத்தை ஆதரித்தாலும், அரசாங்கம் உற்சாகப்படுத்தினாலும் சமுதாய மரபுகள் அதனை முறியடித்து அவள் வாழ்வில் மண்ணைப் போடுகிறது’’[3] என்று ஆசிரியர் புலப்படுத்துகிறார்.

**தடைக்கு விடை**

பெண்கள் முன்னேற்றத்திற்குத் தடையாயிருக்கின்ற சமுதாய மரபுகளைச்

‘‘சமூகச் சட்டமே! சுமூக வழக்கமே!
நீங்கள் மக்கள் அவைரும்
ஏங்கா திருக்க மண்ணாய்ப் போகவே!’’[4]

என்று பாரதிதாசன் பழித்துரைக்கிறார். ‘‘மறுமணம் புரிவது சிறுமையென்றறைவது குறுகிய மதியென அறிஞர்கள் மொழிகுவர்’’[5] என்றும் விதவை மறுமணத்தை வலியுறுத்தி பெண்கள் முன்னேற்றத்திற்கு வழிவகுக்கின்றார். இதனை சிவசங்கரி தமது ‘தீர்வு’ என்னும் புதினத்தில்

எடுத்துரைக்கின்றார். திருமணமான அன்று இரவே கணவனை இழந்து விடுகிறாள் பூரணி. பத்து நாட்கள் சென்றபின் அவள் ஆசிரியையின் அறிவுரைப்படி அண்ணன் அனுமதியுடன் கல்வியைத் தொடர்கிறாள்.

இச்சமுதாயம் அளிக்கின்ற விதவைக் கோலத்தை அவளுக்கு ஆசிரியர் கொடுக்கவில்லை. பூரணி விதவையாகக் காட்சியளிப்பதை அவள் அண்ணன் அனுமதிக்க வில்லை. "கணவன் இறந்து போனதை தம்பட்டம் அடித்து அறிவிக்கும் தினுசில் விதவைக் கோலத்தை அவள் மீது திணிப்பதை அவளின் அடிப்படை அலங்காரங்களைக் கூட கலைப்பதை வெள்ளை உடையை மாட்டிக் கொண்டு கைகளும், கழுத்தும், முகமும் மொட்டையாக நிற்பதை அனுமதிக்காததால் பூரணி எப்போதும் போலவே இருந்தாள்"[6] என்று ஆசிரியர் கூறுவதிலிருந்து பெண்களின் நிலை படிப்படியாக முன்னேறி வருகின்றது என்பது புலனாகிறது.

**மறுமணம்**

சமுதாயம் பெண்களுக்கிழைக்கின்ற கொடுமைகளில் ஒன்று விதவைக் கோலம். அதனைத் தவிர்த்து விடுகின்றார் ஆசிரியர். அதுமட்டுமல்ல பூரணி கல்வியைத் தொடர்கின்றாள். மேலும் தன் அண்ணனின் விருப்பப்படியே தன்னை விரும்புகின்ற கதிரேசனை மறுமணம் புரிந்து கொள்ள ஒப்புதல் தருகின்றாள். நம்முடைய சமுதாயத்தில் குறிப்பாக கிராமப்புறங்களில் விதவை

மணம் நினைத்துப் பார்க்க முடியாத அளவில் இருந்து வருகிறது. அத்தகையதொரு சூழ்நிலையில் விதவைகளின் மறுமணம் நிகழ்கின்றது. இது பெண்முன்னேற்றத்தை எடுத்துக் காட்டுகின்றது. இவ்வாறு பெண்களின் முன்னேற்றத்தினை ஆசிரியர் தமது புதினத்தில் தெளிவாக எடுத்துக் காட்டுகின்றார்.

**உரிமை**

சமுதாயத்தில் ஏற்படுகின்ற இன்னல்களையும் கொடுமைகளையும் வென்று வாழப் பெண்களுக்கு உரிமை உண்டு. அவ்வுரிமையினை அவர்கள் திறமையுடன் நிலைநாட்ட வேண்டும். கணவன் மனைவிக்கு இன்னல்கள் விளைவித்தானென்றால், அவற்றினின்று தன்னை விடுவித்து அவனுக்கு அதற்குரிய தண்டனையளிப்பதற்கு மனைவிக்கு உரிமையுண்டு. பெண் என்பதற்காக கணவன் இழைக்கின்ற கொடுமைகளையெல்லாம் பொறுத்துக் கொண்டு அடிமையாக வாழ வேண்டும்? “எத்தகைய கொடுமை இழைக்கப்பட்டாலும் ஒரே கணவனுடன் தான் பெண் என்பவள் வாழ்ந்ததாக வேண்டும் என்னும் மரபு நெறி பெண்ணடிமைக்குப் பெரிதும் வித்திடுகின்றது”[7] கணவனுடைய கொடுமையிலிருந்து தப்பி அவனுக்குத் தண்டனையும் அளிக்கிறாள் சந்திரா. கடைசிவரை கணவனுடன் வாழ்ந்தேயாகவேண்டும் என்னும் சமுதாய மரபைத் தகர்த்தெறிகின்ற பெண்ணைச் சிவசங்கரி ‘மூக்கணாங்கயிறு’ என்னும் புதினத்தில் படைத்துக் காட்டுகின்றார்.

**‘மூக்கணாங்கயிறு’ புதினத்தில் சந்திரா**

பிறந்த வீடு வழியாகச் சந்திராவுக்கு வந்த சொத்து அதிகம். கணவனை எதிர்பார்த்து தான் வாழவேண்டும் என்பதில்லை. சந்திராவின் கணவனுக்கு அவன் சம்பளம் மட்டுமே உரியதாகும். இந்நிலையில் அவன் பல பெண்களோடு தொடர்பு கொண்டு ஒழுக்கங்கெட்டு நடக்கிறான். பல ஆண்டுகள் பொறுத்திருந்த சந்திரா பிள்ளைகள் பெரியவர்களானதும் கணவனின் கொடுமைகளிலிருந்து மீட்சி பெற எண்ணியவள் அவனைத் தண்டித்து விடுகிறாள்.

மூர்த்தி தொடர்பு வைத்திருந்த நளினியையே அவனுக்கு இரண்டாவது திருமணம் செய்து வைத்து விடுகிறாள் சந்திரா. கணவனை விட்டுப்பிரிந்து வாழ எண்ணுகிறாள். திருமணம் முடிந்த பின் “இனிமேல் உங்களை இங்க வைச்சிக்கிறதா எனக்கு எண்ணம் இல்லே. காலம், நேரம் இல்லாமல் இப்ப கதவை சாத்தின மாதிரி நீங்கள் நடந்துக்கறதை இனியும் நான் பொறுத்துக்கிட்டுப் போறதா இல்லே. பகல் நேரத்திலே கால்மணி, அரைமணினு பிள்ளைகளுக்கு அப்பனா வந்திட்டுப் போயிட்டு இருங்க போதும். அதுக்கு மேல எதுவும் வேணாம். உங்கள் இருக்கை, சாப்பாடு எல்லாம் அங்கேதான் அவளோடத் தான்”[8] என்று சந்திரா தன் கணவனிடம் கூறிவிடுகிறாள். சந்திராவின் தந்தை கொடுத்த வீடு பணம் சொத்து எல்லாம் அவள் பேரில் தான் உள்ளன.

மூர்த்தி தன்னுடைய சம்பளத்தை மட்டும் வைத்துக் கொண்டு வாழ்ந்தாக வேண்டும். அவனுக்கு இரண்டாவது திருமணம் மகிழ்ச்சியளிப்பது போல் இருந்தாலும் அது ஏமாற்றத்தை அளித்தது. மேலும் ‘‘இந்தக் கல்யாணம் உங்களுக்கு ஓர் ஆயுள் தண்டனையாகதான் மாறப் போவுது. ஏன் பசங்களோட எதிர் காலத்துக்காக இந்தத் தண்டனையை உங்களுக்கு நான் கொடுக்கும்படி நீங்கள் நடந்துக்கிட்டீங்க’’[9] என்று சந்திரா கூறுகிறாள். தனக்குப் பல இன்னல்கள் விளைவித்த கணவனுக்கு இரண்டாவது திருமணம் செய்து அடக்கி விடுகிறாள் சந்திரா. திறமையாகக் கணவனுடைய கொடுமைகளிலிருந்து தப்பித்து விடுவது மட்டுமல்லாமல், பிறந்த வீட்டிலிருந்து தனக்குக் கிடைத்த உடைமைகளையும் பாதுகாத்துக் கொள்கிறாள். கணவனின் கொடுமைகளிலிருந்து விடுபட்டு அவனுக்கும் தண்டனையைக் கொடுத்து சொந்தமாக முயற்சி செய்து ஒரு பெண்ணால் வாழமுடியும் என்பதை ஆசிரியர் சந்திராவின் மூலம் எடுத்துக் காட்டுகிறார். இறுதிவரை கணவனின் கொடுமைகளுக்கெல்லாம் ஒரு பெண் அடிமையாக வேண்டுமென்பதில்லை. அவனுடைய கொடுமைகள் எல்லை மீறும் போது ஒரு பெண் தனியாக வாழவும் உரிமையுண்டு என்னும் கருத்தை ஆசிரியர் வலியுறுத்துகிறார்.

**பயிரை மேய்ந்த வேலிகள்**

ஒரு பெண் ஒழுக்கம் தவறாமல் ஓர் ஆண்மகனுடன் சேர்ந்து வாழ இச்சமுதாயத்தில் முழு உரிமையுண்டு. இதனைச் சிவசங்கரி 'பயிரை மேய்ந்த வேலிகள்' என்னும் நாவலில் எடுத்துரைக்கின்றார். பெற்ற மகளை வணிகப் பொருளாக்கச் சம்மதித்துவிட்டு, துளி கவலை இல்லாமல் காந்தம் இருக்கிறாள். இதை விமலா வெறுக்கிறாள். ஒழுக்கமான இல்லறத்தையே நாடுகிறாள் விமலா ''எனக்கு படிப்பு, பாட்டு, டான்ஸ்னு ஒண்ணுமே நல்லா வர மாட்டேங்குது. ஆனா சத்தியமா அதுக்காக நான் வருத்தப்படவில்லை. ஒரு நல்ல ஆம்பிளைக்கு உத்தமமான மனைவியா இருந்து, குடும்பத்தை நல்லா கவனிச்சுக்க தெரிஞ்சா போதும்னே நா நினைக்கறேன்''[10] என்று விமலா கூறுகிறாள். இதைக் கேட்ட குருவும் ஆழ்ந்து சிந்திக்கின்றான்.

விமலாவும் குருவும் நல்ல நண்பராக பழகினர். குருவின் தந்தையினுடைய சுயநலம் அவனுடைய எதிர்காலத்தை இருளடையச் செய்வதாயுள்ளது. பெற்றபெண் பிள்ளையைக் காத்து நல்வழியில் நடத்திச் செல்ல வேண்டிய பெற்றோர்களே இவர்களுடைய எதிர்காலத்தைப் பாழடிக்க முனைகின்றனர். இதையெல்லாம் சிந்தித்த இருவரும் கணவன் மனைவியாக வாழ முடிவெடுக்கின்றனர். விமலா தன் அன்னையின் கொடுமைகளிலிருந்து விடுபட்டு ஓர் ஆடவனுக்கு மனைவியாக வாழத் தனக்கு உரிமையுண்டு

என்பதை நிலை நாட்டுகிறாள். சமுதாயத்தில் ஒரு பெண் தனக்கிருக்கின்ற உரிமையைத் துணிச்சலுடன் பெற வேண்டும் என்னும் கருத்தை ஆசிரியர் இந் நாவலில் எடுத்துரைக்கின்றார்.

**சுதந்திரம்**

சமுதாயத்தில் பெண்கள் அடிமைகள் அல்ல. ஆனால் நடைமுறை வாழ்க்கையில் பெண் இனத்தின் பெரும்பகுதியினர் அடிமைகளாகவே வாழ்கின்றனர். அதற்குக் காரணம் சமுதாய மரபுகளும், சட்டங்களுமேயாகும். ‘‘குடிகாரன், சூதாடி, அடிக்கடி வரதட்சிணை கேட்டு வம்பு செய்வோன் எனப் பலதரப்பட்ட ஆண்களின் அடிமைகளாகப் பெண்கள் வாழும் சூழ்நிலை தவிர்க்க முடியாததாகி விடுகிறது’’[11] என்று பெண்களின் இன்றைய நிலையைச் சுட்டிக்காட்டுகிறார் ஆசிரியர்.

‘‘பெண்ணுக்கு விடுதலை நீரில்லையென்றால்
பின்னிந்த வுலகினிலே வாழ்க்கையில்லை’’[12]

என்று பாரதியார் பெண்கள் சுதந்திரத்தின் முக்கியத்துவத்தை அறிவுறுத்தியுள்ளார். குடும்பத்தில் பெண்ணினுடைய முன்னேற்றத்திற்குப் பெற்றோரே தடையாயிருந்தால் வீட்டை விட்டு வெளியேறவும் அவளுக்குச் சுதந்திரம் உண்டு. இக்கருத்தைப் பாரதிதாசன்,

"கனத்த உன்பெற்றோரைக் கேளே!- அவர்

கல்லொத்த நெஞ்சையுன் கண்ணீரினாலே

நனைத்திடுவாய் அதன் மேலும் - அவர்

ஞாயம் தராவிடில் விடுதலை மேற்கொள்!"[13]

என்று வலியுறுத்தியுள்ளார். இந்நிலையைச் சிவசங்கரி தமது நதியின் வேகத்தோடு, என்னும் நாவலில் எடுத்துக் காட்டுகிறார்.

**நதியின் வேகத்தோடு தர்மா**

தர்மாவின் உள்ளம் சிறுவயதிலிருந்தே சுதந்திரத்தை நாடுகிறது. யாரும் தன்னை கட்டுப்படுத்தக் கூடாது. உயர்கல்வி பெற வேண்டும் என்று விரும்புகிறாள். அவளுடைய கல்லூரிக் கல்விக்கு வீட்டில் எதிர்ப்பு எழுகின்றது. ஒருவரையொருவர் புரிந்து கொண்டு திருமணம் செய்து கொண்டால் நல்லது என்று எண்ணுகிறாள். ஆனால் கிராமத்துச் சூழ்நிலையில் பழமையில் ஊறிய குடும்பத்தில் இந்த எண்ணம் ஈடேறுவது இயலாத ஒன்றாகும்.

ஆணுக்குப் பெண் சமம் என்றும், பெண் ஆணுக்கு அடிமையில்லை என்றும் உறுதியான உரிமை எண்ணம் கொண்டவள் தர்மா. பெண் என்பவள் நாணில் மாதிரி என்று தன் அன்னை கூறியதை எண்ணி நகைக்கிறாள் தர்மா. பக்கத்து வீட்டு மாமா தன் மனைவியைச் சீற்றத்துடன் கூறுவதைக்

கண்ணுற்றுச் சீறுகிறாள். முதுகெலும்பில்லாமல் ஒரு பெண் கோழையாக இருக்கிறாள். அவளை ஒருத்தன் அநியாயமாக அடக்கி மிருகத்தை மிரட்டுகிற மாதிரி வைத்துக் கொண்டு இருக்கிறான். இதைக் கண்டிக்காமல் இதற்கு ஒரு சமாதானமா''[14] என்று நினைக்கிறாள். அதாவது எந்தக் காரணத்திற்காகவும் பெண் அடிமை இல்லை என்று எண்ணிச் செயல் படுகிறாள் தர்மா.

தந்தை பார்த்து முடிவு செய்தது மணமகனை தர்மாவால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை. எப்படியாவது கல்வியை முடித்து விட்டுப் பணிபுரிந்து தன் விருப்பம் போல் வாழ வேண்டுமென்று அவள் உள்ளம் விரும்புகிறது. ''எனக்கு இந்தக் கல்யாணம் பிடிக்கலை நான் போறேன், நான் சாகமாட்டேன். அதனாலே என்னைத் தேட வேண்டாம்''[15] என்று கடிதம் எழுதி வைத்து விட்டு வீட்டை விட்டு வெளியேறிவிட்டாள்.

தர்மா தாய் தந்தையை விட்டுப் பிரிந்து சென்று சொந்த முயற்சியில் முன்னேறுகிறாள். தன் விருப்பம் போலவே தனக்குரிய துணையையும் தேர்ந்தெடுக்கிறாள். தன் திருமணத்திற்குப் பெற்றோரை அழைக்க விரும்புகிறாள். தர்மாவின் தோழி மங்களா வியப்புற்று அவர்களையெல்லாம் நீ மறக்கவில்லையா என்று கேட்கிறாள். அதற்கு தர்மா : என் சுதந்திரத்துக்கு அவா குறுக்க நின்னா . . . அதனால நான் விலகிட்டேன்''[16] என்று பதிலுரைக்கிறாள். இதிலிருந்து தர்மாவின் சுதந்திரப் போக்குப் புலனாகிறது.

**பெண்களின் மனத்துணிவு**

ஒரு பெண் வாழ்க்கையில் முன்னேற வேண்டுமென்றால் அவளுக்குச் சுதந்திரம் வேண்டும். அவள் அடிமைத்தளையில் சிக்கிக் கொள்ளக் கூடாது. சுதந்திரம் கிடைக்கவில்லை என்றாள் அவள் அதைப் போராடிப் பெறவேண்டும். பெண் முன்னேறுவதற்குக் குடும்பத்தை விட்டு விலகியிருக்க நேர்ந்தால் அதையும் தயங்காமல் மேற்கொள்ள வேண்டுமென்று ஆசிரியர் தமது கருத்தைத் தெரிவிக்கின்றார். வாழ்க்கையில் முன்னேற வேண்டுமென்னும் துடிப்புடன் தர்மா வீட்டை விட்டு வெளியேறுவதை ஆசிரியர் காட்டுகிறார். அதுபோல 'கப்பல் பறவை' என்னும் நாவலில் சுஜா வீட்டை விட்டு வெளியேறுவது மட்டுமல்லாமல் சொத்தில் தனக்குரிய பகுதியை வழக்காடிப் பெறுகிறார்.

**'கப்பல் பறவை'யில் சுஜா**

சுஜா பொறியிற்கல்லூரியில் சேர்ந்து கல்வி பயில விரும்புகிறாள். அவள் தந்தை இறந்து விட்டதால் அதற்கு அவள் அன்னை மறுப்புத் தெரிவிக்கிறாள். அது மட்டுமல்ல, தன் அண்ணன் மகனுக்கு மணம் செய்து வைக்க முடிவெடுக்கிறாள். ஆனால் சுஜா கல்வி கற்க வேண்டுமென்று பிடிவாதமாகச் சொல்லி அதற்குரிய பணமும் கேட்கிறாள். அவள் அன்னை சல்லிக்காசுக்கூட கொடுக்க முடியாதென்கிறாள். அதற்கு சுஜா ''இப்படிப் பேச

உங்களுக்கு உரிமையில்லேம்மா. இது எங்க தாத்தா வழி வந்த சொத்து . . . .இதுலே எனக்கும் உரிமை இருக்கு . . . . முரண்டு பண்ணினிங்கன்னா கோர்ட் வரைக்கும் போகக்கூட நாரெடி''[17] என்று பதில் கூறுகிறாள்.

சுஜா போராடித் தனக்குரியப் பங்கை வாங்கிக் கொண்டு அம்மாவுடைய வெறுப்புடன் வீட்டைவிட்டு வெளியேறுகிறாள். அதன் பின்பு அவளுக்கும் குடும்பத்திற்கும் எந்த விதமான தொடர்புமில்லை. சுஜா தான் எண்ணிய வண்ணம் கல்வியில் உயர்ந்து ஒரு நல்ல பணியில் சேர்ந்து வாழ்க்கையில் முன்னேறி விடுகிறாள். உரிமைக்காகப் போராடும் பெண்ணாகச் சுஜா விளங்குகிறாள். தன் சுதந்திரத்திற்காக மனத்துணிவுடன் செயலாற்றும் பெண்ணாகச் சுஜாவை ஆசிரியர் படைத்திருக்கின்றார். பாரதி கண்ட புதுமைப் பெண்ணாகச் சுஜாவை ஆசிரியர் படைத்திருக்கின்றார்.

''சாத்திரங்கள் பலபல கற்பராம்

சவுரியங்கள் பலபல செய்வராம்''[18]

என்று பாரதி கூறியதற்கேற்றார்போல் சுஜா கல்வியில் சிறந்தவளாய்த் தனக்குத் தானே பல வசதிகள் செய்து கொள்ளும் திறமை படைத்தவளாகக் காணப்படுகிறாள். அவள் கல்வியில் சிறந்து உயர்ந்த பணியில் அமர்ந்து

சமுதாயத்தின் முன்னணியில் இருப்பதால் பத்திரிகை நிருபர் வந்து பேட்டி காணுகிறார். ‘‘பெண்கள் பத்திரிகை அட்டைல உன் படத்தைப் போட்டுப் பாரதி கண்ட புதுமைப் பெண்ணுனு கட்டுரை எழுத அவங்க வந்திருக்கறப்போ’’[19] என்று அவள் நண்பன் சங்கர் கூறுவதிலிருந்து சுஜாவின் முன்னேறிய நிலையைப் புரிந்து கொள்ள முடிகிறது.

சுஜா மாமன் மகனை மணம் முடித்து வீட்டில் சமையலறைக்குக் காவலாக இருக்காமல் மனத்துணிவுடன் வீட்டைவிட்டு வெளியேறி உயர்கல்வி பயின்று தன் முயற்சியிலேயே முன்னேறுவதாக ஆசிரியர் காட்டுகிறார். சிறுமியாயிருக்கும் போதே மற்ற சிறுவர்களிலிருந்து மாறுபட்டவளாகக் காணப்படுகிறாள். பெண்கள் முன்னேற வேண்டும். புதுமைப் பெண்களாகத் திகழ வேண்டும் என்று சிவசங்கரி எண்ணுகிறார். அவர் எண்ணங்களைத் தர்மா, சுஜா போன்ற கதைமாந்தர்களின் வாயிலாகப் புலப்படுத்துகிறார்.

**சிவசங்கரியின் காலப்பகுப்பு**

பெண்களின் நிலை காலத்துக்குக் காலம் மாறுபடுகிறது. ஒவ்வொரு காலக்கட்டத்திலும் பெண்கள், சமுதாயத்தில் எவ்வாறு வாழ்ந்திருக்கின்றனர் என்பதை ஆசிரியர் தமது ‘பாலங்கள்’ என்னும் புதினங்களில் தெளிவாக விளக்குகிறார். சிவசங்கரியின் மூன்று கால் நூற்றாண்டுகளில் பெண்களின் நிலை எவ்வாறு இருந்தது என்பதை

விளக்குகிறார்.1907-1931 முதல் கால் நூற்றாண்டு 1940 – 64 இரண்டாவது கால் நூற்றாண்டு 1965 – 85 மூன்றாவது கால் நூற்றாண்டு.

**முதல் பகுப்பு**

முதல் காலக்கட்டத்தில் அதாவது 1907 – 1931 இல் பெண்களுக்கு சிறுவயதிலேயே திருமணம் முடித்து விடுகின்றனர். பிறந்ததிலிருந்தே ஒரு பெண் திருமணத்திற்காகவும், வீட்டுப் பொறுப்புகளை ஏற்றுக்கொள்வதற்காகவும் வளர்க்கப்படுகிறாள். பெண்ணுக்குக் கல்வி மறுக்கப்படுகிறது. இந்த விதத்திலேயே சிவகாமுவைப் படைத்துக் காட்டுகிறார் ஆசிரியர். இதனை ‘‘நாங்கள்ளாம் சின்ன பெண்ணா இருக்கிறப்போ உங்களுக்கு இப்ப இருக்கிற வசதிகள்ள கால்வாசி கூடக் கெடையாது. பெண்கள் வீட்டுப்படி தாண்டக்கூடாது. பள்ளிக்கூடம் அது, இதுண்ணா ஒதைதான் ஒன்பது வயசுலே கல்யாணம் ஆனதுமே பெரிய மனுஷியாட்டம் நடந்துக்க தெரியனும். பெரியவா ஒண்ணு சொல்லிட்டா ஏன்?ன்னு பதிலுக்கு கேக்க மாட்டோம்’’[20] என்று சிவகாமு கூறுவதிலிருந்து அக்காலப் பெண்களின் நிலை புலனாகிறது.

**இரண்டாம் பகுப்பு**

அடுத்த கால் நூற்றாண்டுக் காலமாகிய 1940 – 1964 இல் பெண்களின் நிலை கொஞ்சம் முன்னேறியுள்ளது. இதனையும் ஆசிரியர் தமது நாவலில் கூறியுள்ளார். மைதிலியின் கல்வி அவள் பாட்டியின் எதிர்பார்ப்புடன்

தொடர்கிறது. அதுவும் பள்ளியோடு முடிந்து விடுகிறது. "பள்ளிப் படிப்பை முடித்த கையோடு சுந்தரம், பெண்ணின் ஜாதகத்தை எடுத்து விட்டதால் மேற்படிப்பு என்ற பேச்சே அந்த வீட்டில் எடுபடவில்லை தான். பாட்டி இருக்கும் போது தன்னை இவ்வளவு படிக்க அனுமதித்ததே அதிகம் என்கிற திருப்தியுடன் மைதிலியும் உட்கார்ந்து விட"[21] என்று ஆசிரியர் அன்றைய பெண்களின் நிலையை மைதிலியைப' படைத்துக் காட்டி விளக்குகிறார். எனினும் முதல் காலக் கட்டத்திலுள்ள பெண்களின் நிலையை விட இரண்டாவது காலக் கட்டத்திலுள்ள பெண்களின் நிலை சற்றே முன்னேறி உள்ளது என்றே கூறலாம்.

**மூன்றாம் காலப் பகுப்பு**

அடுத்தக் காலக் கட்டத்தில் அதாவது 1965 – 85 இல் வாழ்கின்ற சாரு எம்.ஏ., பட்டம் பெறுகிறாள். வங்கியில் பணியில் சேருகிறாள். அவள் தானாக ஒருவனைத் தேர்ந்தெடுப்பதற்கும் அவள் தந்தை உரிமை கொடுத்திருந்தார், என்றாலும் அவள் தந்தை தேர்ந்தெடுக்கின்ற மணமகனையே மணந்து கொள்கிறாள். அவனுடைய கொடுமைகளைப் பொறுத்துக் கொள்ள முடியாமல் மண முறிவு பெறுகிறாள். சொந்த முயற்சியிலேயே தன் மகள் அபர்ணாவை வளர்க்கிறாள். இந்நிலை பெண்களின் முன்னேற்றத்தை எடுத்துக் காட்டுகிறது. ஆனால் அவள் மகள் அவளைவிட முன்னேறிய நிலையில் வாழ்கிறாள்.

**பெண்களின் சுதந்திரப் போக்கு**

அபர்ணா தனக்குரிய மணமகனைத் தானாகவே தேர்ந்தெடுக்கிறாள். இதைத் தன் அன்னையிடம் ‘‘வி லவ் ஈச் அதர் மம்மி. . . நாங்க கல்யாணம் பண்ணிக்க விரும்புகிறோம். நீ அவனைப் பார்க்கணும்னுதான் நா மத்தியானம் இங்க கூட்டிண்டு வந்தேன்’’[22] என்று அபர்ணா கூறுகிறாள். சிறுவயதிலிருந்தே சுதந்திரப் போக்குடையவள் என்பதை ஆசிரியர் விளக்குகிறார். ‘‘பன்னிரண்டு வயசு ஆவதற்குள்ளாவே அபர்ணாவுக்கு அலாதித் தனித்தன்மை, தன்னம்பிக்கை, சுதந்திரப் போக்கு வந்து விட்டதைப் புரிந்துகொள்ள முடிகிறது. யாரும் என் விசயத்தில் தலையிடாதீர்கள் என்ற மனப்பான்மை இத்தனை அழுத்தமாக வேர் விட்டுக்கொள்ள யார் எது காரணம் என்று பல தடவைகள் சாரு மண்டையை உடைத்து கொண்டிருக்கிறாள்’’[23.] பெண்கள் தங்களின் வாழ்க்கைக்கு எது தேவையென்பதை அறிந்து அதற்கேற்ற முடிவுகளை எடுப்பதை இந்நாவலின் வழியாக சிவசங்கரி எடுத்துரைக்கிறார்.

பெண்கள் விதவைக்கோலத்திலிருந்து விடுபடுமாறு மணம் புரிந்து கொள்கின்றனர் என்பதை ஆசிரியர் நமது புதினத்தில் எடுத்துக் காட்டுகிறார். 1998இல் பெண்கள் எவ்வாறு இருப்பார்கள் என்பதையும் படம் பிடித்துக் காட்டுகிறார். அபர்ணாவின் மகள் தன் விருப்பப்படி செயல்படுவதில் தன் அன்னையை வென்று விடுகிறார். ‘‘நினைவு தெரிந்த நாளிலிருந்து புல்புல்

இப்படித்தான், சிந்துஜா என்கிற அழகான பெயரை ரொம்ப சின்னவயசிலேயே வெறுத்துச் செல்லப் பெயரான புல்புல்லை பள்ளியில் பதிவு செய்து கொண்டதில் துவங்கி, இன்று வரை அவள் விருப்பம் எதுவோ தனக்கு எது சரி என்று தோன்றுகிறதோ அதன்படிதான் நடந்து கொள்கிறாள்''[24] என்று ஆசிரியர் கூறுவதிலிருந்து காலந்தோறும் பெண்களின் நிலை மாறுபடுவதைக் காண முடிகிறது.

காலம் மாறும் போது பெண்களின் நிலைமாறுபடுகிறது. பெண்களின் முன்னேற்றத்துக்காகப் பலரும் பாடுபடுகின்றனர். இதன் விளைவாகப் பெண்களின் நிலையும் முன்னேறிக் கொண்டிருக்கிறது. பெண்களை அடிமைகாளாக்குகின்ற சமுதாய மரபுகளும் தளர்ந்து கொண்டிருக்கின்றன. பெண்களுக்கு விதிக்கப்பட்டிருக்கின்ற கட்டுப்பாடுகள் நீங்கும் போது அவர்கள் சமுதாயத்தின் முன்னணிக்கு வந்து விடுகின்றனர்.

**முடிவுரை**

பெண்களின் முன்னேற்றத்தை ஆசிரியர் தமது நாவலில் படம் பிடித்துக் காட்டுகிறார். கல்வியின் வாயிலாகப் பெண்கள் வாழ்க்கையில் முன்னேறுவதைத் தெளிவுறுத்துகிறார். சமுதாயத்தில் வாழத் தங்களுக்குத் உரிமையுண்டு என்பதைப் பெண்கள் போராடிப் பெறுவதையும் சிவசங்கரி எடுத்துக் காட்டுகின்றார். கணவனுக்குத் தண்டனையளித்து கணவனின் கொடுமைகளிலிருந்து விடுபடுகின்ற பெண்களையும் ஆசிரியர் படம் பிடித்துக் காட்டுகிறார்.

**சான்றெண் விளக்கம்**

1. பாரதியார் – பாரதியார் கவிதைகள் - பெண்களின் விடுதலைக் கும்மிப்பாடல் - ப. 416
2. சிவசங்கரி – வெட்கம் கெட்டவர்கள் - ப.117
3. சி.சா.பார்த்த சாரதி - இந்தியப் பெண்களும் சமுதாய மரபுகளும் - தினமணி – செப்டம்பர்-26 ப.4
4. பாரதிதாசன் - பாரதிதாசன் கவிதைகள் - மூடத்திருமணம் ப.74
5. பாரதிதாசன் - பாரதிதாசன் கவிதைகள் - கைம்பெண்நிலை ப.80
6. சிவசங்கரி தீர்வு – ப. 43
7. சி.சா.பார்த்த சாரதி - இந்தியப் பெண்களும் சமுதாய மரபுகளும் - தினமணி – செப்டம்பர்-26 ப.4
8. சிவசங்கரி - மூக்கணாங்கயிறு ப. 106
9. மேலது ப.111
10. சிவசங்கரி – பயிரை மேய்ந்த வேலிகள் ப.46
11. சி.சா.பார்த்த சாரதி - இந்தியப் பெண்களும் சமுதாய மரபுகளும் - தினமணி – செப்டம்பர்-26 ப.20
12. பாரதியார் – பாரதியார் கவிதைகள் - பெண்களின் விடுதலை - ப.
13. பாரதிதாசன் - பாரதிதாசன் கவிதைகள் - பெண்ணுக்கு நீதி ப.79

14. சிவசங்கரி – நதியின் வேகத்தோடு ப.79

15. மேலது ப.94

16. மேலது ப.172

17. மேலது  கப்பல் பறவை ப. 50

18. பாரதியார் – பாரதியார் கவிதைகள் - புதுமைப் பெண்கள் - ப.419

19. சிவசங்கரி – கப்பல் பறவை ப.104

20. சிவசங்கரி – பாலங்கள் ப.307

21. மேலது ப.39

22. மேலது ப. 263

23. மேலது ப. 229

24. மேலது ப. 293

# முடிவுரை

"சிவசங்கரி புதினங்களில் பெண்கள்" என்ற தலைப்பில் அமைந்த இவ்வாய்வேட்டில் கண்டறிந்த மெய்மைகளைத் தொகுத்துக் காணலாம். சென்ற நூற்றாண்டின் இறுதியில் தமிழில் தோன்றிய நாவல் வடிவம் காலந்தோறும் வளர்ச்சி பெற்று வந்துள்ளது. ஆங்கில ஆட்சியின் விளைவாகப் பல சமூக மாற்றங்கள் தோன்றியுள்ளன. சமூக சீர்திருத்தச் சிந்தனைகள் தமிழ் நாட்டில் பரவி செல்வாக்குப் பெற்றுள்ளன. இலக்கிய உணர்வும் சமூக உணர்வும் கலந்து சமூகச் சிக்கல்களுக்குத் தீர்வு காணும் முயற்சி பல்வேறு தளஙகளில் பல்வேறு கோணங்களில் மேற்கொள்ளப்பட்டுள்ளது. இதன் விளைவாகப் பெண்களின் வாழ் நிலையில் குறிப்பிடத் தக்க முன்னேற்றம் ஏற்பட்டுள்ளது.

பெண்களும் சமூகமும் என்னும் இயலில் பெண்களுக்குச் சமூகத்தில் தரப்பட்டுள்ள இடம் ஆய்வு செய்யப்பட்டுள்ளது. குடும்பம் சிக்கலில்லாமல் மகிழ்ச்சியுடன் இயங்கக் கணவனும் மனைவியும் சேர்ந்து பாடுபட வேண்டும் எனக் கூறுகின்றனர். கணவனும், மனைவியும் ஒருவரையொருவர் புரிந்து கொள்ள வேண்டும். கருத்து வேறுபாடு இன்னல்களுக்குத் தோற்றுவாயாக அமைவதால் அதற்கு இடமளிக்கலாகாது. பொதுவாக ஆண்களே குடும்பத்தில் தலைமை நிலையிலிருப்பதால் தான் பெண்களுக்கு இன்னும்

சமத்துவம் அளிக்கப்படவில்லை. பெண்கள் கணவனுக்கு இசைவாக நடந்து வளம் சேர்த்த போதும் ஆண்கள் மாறுபட்டு நடப்பதால் குடும்பத்தில் சிக்கல்கள் பல்வேறு ஏற்படுகின்றன. எனவே ஆண்கள் தங்கள் போக்கை மாற்றிக் கொண்டு பெண்களும் மனித உள்ளம் படைத்தவர்கள் என்பதைப் புரிந்து கொண்டு நடக்காதவரை சமத்துவம் ஏட்டளவில் தான் இருக்கும் என்பதை இருவரும் வலியுறுத்துகின்றனர்.

குழந்தை வளர்ப்பு குடும்பத்தில் முக்கியமானது பெற்றோர்களின் பொறுப்பற்ற தன்மை குழந்தைகளைக் கெடுத்துவிடும். எனவே குழந்தைகளைக் கண்டிப்புடன் வளர்க்க வேண்டும். குழந்தைகளுக்கு முன் பெற்றோர்கள் தங்கள் பூசல்களையும், கருத்து மோதல்களையும் வைத்துக் கொள்ளுதல் கூடாது. குழந்தைகள் தற்காலத்தில் அறிவுக் கூர்மை மிகுந்தவர்களாகவும், தனித்தன்மையுடையவர்களாகவும் காணப்படுகின்றனர். ஆனால் பெற்றோர்கள் அவர்களைச் சரியாகப் புரிந்து கொள்வதில்லை. எனவே பல சிக்கல்களும் உருவாகின்றன என்பதை ஆசிரியர் தமது படைப்பில் சித்திரித்துக் காட்டுகிறார்.

காலங்கள் மாறிய போதும், முன்னேற்றங்கள் ஏற்பட்ட போதும், சமூகத்தில் மாமியார்கள் மாறவில்லை. தாங்களும் ஒருகாலத்தில் மருமகள்களாக இருந்தவர்கள் தானே என்பதை மறந்துவிடுகின்றனர். மருமகளைத் தன் மகளாகக் கருத வேண்டிய மாமியார் அவளை ஒரு

பகைவனைப் போலவே நடத்துகின்றார். இதனால் குடும்பத்தில் விரிசல்கள் ஏற்படுகின்றன. இதற்குச் சில மருமகள்களும் கூட காரணமாக இருப்பதுண்டு. இந்நிலை மாறக் கல்விதான் துணைபுரிய முடியும் என்று ஆசிரியர் நம்புகின்றார். பெரும்பாலும் தன்னலமுடன் நடந்து கொள்கின்றனர். தங்கள் குழந்தைகள் மீது ஆதிக்கம் செலுத்துகின்றனர். ஆண் குழந்தைகளை ஒருவிதமாகவும், பெண் குழந்தைகளை ஒரு விதமாகவும் நடத்துகின்றனர். பெண்களை ஒரு பாரமாக எண்ணும் பெற்றோர் அவர்களுக்கு விரைவாகத் திருமணம் செய்து வைத்து அனுப்புவதிலேயே குறியாக இருக்கின்றனர். எனவே அவர்களுக்குரிய அடிப்படைத் தேவையான கல்வியைப் பற்றிச் சிந்திப்பதேயில்லை. திருமணத்துடன் தங்களின் கடமை முடிந்து விட்டதாக எண்ணுகின்றனர்.

திருமணமாகாத பெண்களுக்குச் சமுதாயத்தில் மதிப்போ, பாதுகாப்போ இருப்பதில்லை. எனவே திருமணம் என்பது பெண்களுக்கு மிகவும் அவசியமானதாகக் கருதப்படுகிறது. கணவன் பல கொடுமை செய்தபோதும் பாதுகாப்புக் கருதிப் பெண்கள் இவற்றையெல்லாம் பொறுமையுடன் சகித்துக் கொண்டு செல்லவேண்டிய சூழ்நிலை ஏற்படுகிறது. இதற்குத் தீர்வு இல்லாமலில்லை. பெண்கள் துணிச்சலுடன் செயல் படவேண்டும். அவசியம் ஏற்பட்டால் பெண்கள் கொடுமை செய்யும் கணவனை விலக்கி வைத்துவிடலாம் என்பதை இரு நாவல்களில் வலியுறுத்துகிறார். சிவசங்கரி

மணவிலக்கு பெற்ற பெண்கள் மறுமணம் செய்துகொண்டு நல்வாழ்க்கையொன்றை அமைத்துக் கொள்வதில் தவறேதும் இல்லை என்றும் எடுத்துரைக்கின்றார்.

பெண்களுக்குக் கல்வி மிகவும் இன்றியமையாததாகும். ஆனால் சமுதாய மரபு காரணமாகவும் சூழ்நிலை காரணமாகவும் பெண்களின் கல்விக்குப் பல தடைகள் ஏற்படுகின்றன. திருமணம் என்பது பெண்களின் கல்விக்கு முக்கியமானதொரு தடையாக விளங்குகிறது. பெற்றோர் பெண்களுக்கு இளம் வயதிலேயே திருமணம் செய்து வைக்க விரும்புவதால் பெண்களால் கல்வியைத் தொடரமுடியவில்லை. எனவே பெற்றோர்கள் தங்கள் பெண் கல்வி முடித்த பின் திருமணம் செய்விப்பது சிறந்தது என்று நாவலாசிரியர் எடுத்துரைக்கின்றார். கல்வியினால் பெண்களுக்குப் பல நன்மைகள் ஏற்படுகின்றன. முக்கியமாகப் பொருளாதாரச் சுதந்திரம் ஏற்படுகிறது. கல்வி கற்று மனைவி வேலைக்குச் சென்று பொருளீட்டுவதால் தன் தேவைகளுக்குக் கணவனைச் சார்ந்திருக்க வேண்டிய அவசியமில்லை. தன் குடும்பத்தின் வருவாயையும் வசதிகளையும் பெருக்கிக் கொள்ள முடிகிறது. தனக்குப் பொருளாதாரப் பாதுகாப்பு இருப்பதால் கணவனின் கொடுமைகளைத் துணிவுடன் எதிர்த்துப் போராட முடிகிறது.

முற்போக்குக் கருத்துக்களைப் புரிந்து கொண்டு தேவைப்பட்டால் மணவிலக்குப் பெற்று மறுமணம் செய்து கொள்ளும் துணிவு ஏற்படுகிறது. வாழ்க்கையில் ஏற்படும் பேரிழப்புகளையும் கல்வியின் உதவியால் துணிச்சலோடு தாங்கிக் கொள்ள முடிகிறது. கல்வியறிவு இல்லாத பெண்கள் பல கொடுமைகளுக்கும் இன்னல்களுக்கும் ஆளாக நேரிடுகிறது.

வீட்டில் அவர்கள் அடிமை போல் நடத்தப்படுகின்றனர். அவர்கள் கருத்துக்களுக்கு யாரும் மதிப்புக் கொடுப்பதில்லை. 47 நாட்கள், விமோசனம், அடிமாடுகள் போன்ற புதினங்கள் கல்வியறிவு இல்லாத காரணத்தால் பெண்கள் அடையும் கொடுமைகளை விளக்கிக் கூறுகின்றன. தங்களுக்கு உண்ண உணவும், உடுக்க உடையும் வேண்டி கணவன் கொடுமைகளையெல்லாம் பொறுத்துக் கொள்ள வேண்டிய நிலை ஏற்படுகிறது. தங்கள் உரிமைகளை நிலைநாட்டிப் போராடும் சக்தி அவர்களுக்குக் கிடைப்பதில்லை. எனவே பெண்கள் சுதந்திரமாக, சமமாக வாழ அவர்களுக்குக் கல்வி இன்றியமையாத ஒன்றாகும். காதல் என்பது இயற்கையாக ஏற்படும் ஓர் உணர்வாகும். இதை யாரும் வெல்ல முடியாது; குறைத்தும் மதிப்பிட முடியாது; கூடாது.

ஒரு கன்னிப் பெண் மணமாகாத ஒரு ஆடவனை விரும்பும் போது அது வெற்றியடைய வாய்ப்புகள் உள்ளன. ஆனால் சில சமயங்களில் சமூக ஒழுக்கத்திற்குப் புறம்பான காதல் நிகழ்ச்சிகளையும் காண முடிகிறது.

திருமணமானவனைக் கன்னிப் பெண்கள் விரும்பும் போது சிக்கல்கள் தோன்றுகின்றன. இவ்வகைக்காதல் கண்டிக்கத் தக்கது என்றும், அது பெரும்பாலும் தோல்வியைத்தான் தழுவுகிறது என்றும் ஆசிரியர் சிவசங்கரி எடுத்துரைக்கின்றார். இது ஒருவனுக்கு ஒருத்தி என்னும் சமுதாய மரபிற்குப் புறம்பானதால் இதை இருவரும் எதிர்க்கின்றனர்.

விதவைகள் மறுமணம் செய்து கொண்டு வாழவேண்டும் என்று சிவசங்கரி வலியுறுத்துகின்றார். அலைபாயும் உள்ளத்தாலும் சில சமயங்களில் காதல் ஏற்படுவதுண்டு என்றும் ஆனால் இது சமூகத்தில் வெற்றியடைவதில்லை என்றும் கூறி இத்தகைய காதலுக்குத் தங்கள் எதிர்ப்பைத் தெரிவிக்கின்றார் ஆசிரியர். தமிழ்ப் பெண்கள் ஒழுக்கத்திலும் கற்பிலும் சிறந்தவர்களாகத் திகழ்கின்றனர். ஆண்கள் எத்தனையோ தவறுகள் செய்த போதும் பெண்கள் ஒழுக்கமுடன் நெறி பிறழாமல் வாழ்வதைத் தன்படைப்பில் காட்டுகிறார். திருமணமான பெண்கள் பிற ஆடவருடன் தவறாகப் பழகுவதோ, அவர்களை நாடுவதோ இல்லை என்பதை எடுத்துரைக்கின்றார். எனினும் சூழ்நிலைகளாலும், வறுமையாலும் சில பெண்கள் தவறிழைக்கும் வாய்ப்புகள் இருப்பதைச் சுட்டிக் காட்டுகிறார். ஆனால் இது சமுதாயத்தில் மிக குறைந்த அளவிலேயே நிகழ்கின்றன; மேலும் இதற்குக் காரணம் சமுதாயச் சூழ்நிலையே என்றும் சுட்டிக்காட்டுகிறார்.

பெண்கள் முன்னேற்றத்திற்குக் கல்வி பெருந் துணைபுரிகின்றது. தற்போது நகர்ப்புறங்களில் மட்டும் இன்றி கிராமப்புறங்களிலும் பெண்கள் கல்வி கற்று நல்ல நிலையில் இருக்கின்றனர். பெண்களுக்கு இச்சமுதாயத்தில் வாழ்வதற்குச் சம உரிமை உண்டு என்னும் இவ்வுரிமையை நிலைநாட்டுவதற்குத் துணிவு மிகவும் அவசியம் என்றும் ஆசிரியர் எடுத்துரைக்கின்றார். ஆனால் இத்துணிவு எல்லாப்பெண்களுக்கும் ஏற்படுவதில்லை. எனினும் கல்வியறிவும், பொருளாதாரமும் இத்துணிவைப் பெண்களுக்குத் தரமுடியும் என்று ஆசிரியர் கருதுகின்றார், நம்புகிறார்

கணவனின் கொடுமை எல்லை மீறும் போது அவனைத் தண்டித்து விட்டு நல்வாழ்வு வாழப் பெண்களால் இயலும் என்றும் அவ்வாறு செய்வதுதான் பெண்களுக்கு முன்னேற்றம் தரும் என்றும் சிவசங்கரி உறுதியாகவும், தெளிவாகவும் எடுத்துரைக்கின்றார்.

இந்த ஆய்வு எழுத்தளார் சிவசங்கரியின் புதினங்களை மட்டுமே எடுத்துக் கொண்டு படைக்கப்பட்டுள்ளது. சிவசங்கரி அவர்கள் நல்ல சிறுகதை ஆசிரியர் ; பயணநூல் ஆசிரியர் கட்டுரை ஆசிரியர் பல்வேறு அமைப்புகளோடு தொடர்பு உடையவர் சிவசங்கரி என்ற ஒரு முழுமையான சிந்தனை ஆளுமை முழுமையாகவே வெளிப்பட வேண்டுமானால், அவருடைய அனைத்து ஆக்கங்களும் ஒருசேர ஆராயப்படவேண்டும். அப்படி

ஆராயப்படும்போது தான் சிவசங்கரி அவர்களின் புரட்சிகரமான முற்போக்கு எழுத்து ஆளுமை வெளிப்படும். சிவசங்கரியின் முழுமையான எழுத்து ஆளுமை மேலும் ஆய்வு செய்யப்படவேண்டும் என்பது மேலாய்வுப் பரிந்துரையாக இவண் சுட்டிக்காட்டப்படுகிறது

# துணை நூற்பட்டியல்

## முதன்மைச் சான்றாதாரங்கள்


| வ.எண் | ஆசிரியர் | பதிப்பகம் |
|---|---|---|
| 1. | சிவசங்கரி | திரிவேணி சங்கமம்<br>வானதி பதிப்பகம்<br>சென்னை – 17<br>வருடம் - 1973 |
| 2. | சிவசங்கரி | நதியின் வேகத்தோடு<br>வானதி பதிப்பகம்<br>சென்னை – 17<br>வருடம் -1976 |
| 3. | சிவசங்கரி | 47 நாட்கள்<br>வானதி பதிப்பகம்<br>சென்னை – 17<br>வருடம் -1980 |
| 4. | சிவசங்கரி | மெள்ள மெள்ள<br>வானதி பதிப்பகம்<br>சென்னை – 17<br>வருடம் - 1981 |
| 5. | சிவசங்கரி | கப்பல் பறவை<br>கங்கை புத்தக நிலையம்<br>சென்னை – 17<br>மூன்றாம் பதிப்பு – 1997 |
| 6. | சிவசங்கரி | இதுவும் தாஜ்மகால் தான்<br>வானதி பதிப்பகம்<br>சென்னை – 17<br>முதற்பதிப்பு – 2013 |
| 7. | சிவசங்கரி | இனி தொடராது<br>வானதி பதிப்பகம்<br>சென்னை – 17<br>முதற்பதிப்பு |

8. சிவசங்கரி
பயிரை மேயும் வேலிகள்
வானதி பதிப்பகம்
சென்னை – 17
முதற் பதிப்பு – 2012

9. சிவசங்கரி
ருசி கண்ட பூனை
வானதி பதிப்பகம்
சென்னை – 17
முதற் பதிப்பு – 2012

10. சிவசங்கரி
அந்தம்மா ரொம்ப நல்லவங்க
வானதி பதிப்பகம்
சென்னை – 17
முதற் பதிப்பு – 2012

11. சிவசங்கரி
காற்றுள்ள போதே
வானதி பதிப்பகம்
சென்னை – 17
முதற் பதிப்பு – 2009

12. சிவசங்கரி
தான் தன் சுகம்
வானதி பதிப்பகம்
சென்னை – 17
முதற் பதிப்பு – 2009

13. சிவசங்கரி
பாலங்கள்
வானதி பதிப்பகம்
சென்னை – 17
பத்தாம் பதிப்பு – 2006

14. சிவசங்கரி
நெருஞ்சிமுள்
கங்கை புத்தக நிலையம்
சென்னை -17
எட்டாம் பதிப்பு – 2008

15. சிவசங்கரி
மெள்ள மெள்ள
கங்கை புத்தக நிலையம்
சென்னை – 17
ஆறாம் பதிப்பு – 2008

16. சிவசங்கரி
வெட்கம் கெட்டவர்கள்
வானதி பதிப்பகம்
சென்னை – 17
முதற் பதிப்பு – 1981

| | | |
|---|---|---|
| 17. | சிவசங்கரி | விமோசனம்<br>வானதி பதிப்பகம்<br>சென்னை – 17<br>முதற் பதிப்பு – 1982 |
| 18. | சிவசங்கரி | மூக்கணாங்கயிறு<br>ராணிமுத்து மாத இதழ்<br>சென்னை – 17<br>முதற் பதிப்பு – 1982 |
| 19. | சிவசங்கரி | திரிசங்கு சொர்க்கம்<br>வானதி பதிப்பகம்<br>சென்னை – 17<br>முதற் பதிப்பு – 1983 |
| 20. | சிவசங்கரி | கண்கெட்ட பிறகு<br>ராணி மாத இதழ்<br>சென்னை – 17<br>முதற் பதிப்பு – 1983 |
| 21. | சிவசங்கரி | அடிமாடுகள்<br>மெட்டி மாத இதழ் வெளியீடு<br>சென்னை – 17<br>முதற் பதிப்பு – 1983 |
| 22. | சிவசங்கரி | பாசம்<br>ராணி முத்து இதழ் வெளியீடு<br>சென்னை – 17<br>முதற் பதிப்பு – 1983 |
| 23. | சிவசங்கரி | தீர்வு<br>ராணி முத்து இதழ் வெளியீடு<br>சென்னை – 17<br>முதற் பதிப்பு – 1984 |

# பிற சான்றாதாரங்கள்

1. பாவேந்தர் கவிதைகள் மாந்தோப்பில் மணம்

பூம்பூகார் பதிப்பகம்

சென்னை -600008

2. திரு.வி.கல்யாணசுந்தரனார்

பெண்ணின் பெருமை அல்லது வாழ்க்கைத்துணை

சாது அச்சுக்கூடம் 1946

சென்னை 600008

3. சிவசங்கரி வாழ்த்துரை

வாழ்க்கை ஒரு கொண்டாட்டம்

கலைஞன் பதிப்பகம்

முதல்பதிப்பு -2005

சென்னை -600005

4. சிவசங்கரி பேட்டிகளில் எடுக்கப்பட்டது

    1. சுபமங்களா – செப்
    2. மங்கையர்மலர் - நவம்
    3. கல்கி – நவம்

5. சி.சா.பார்த்த சாரதி

இந்தியப் பெண்களும் சமுதாய மரபுகளும்

தினமணி செப்டம்பர் -26

1985

6. சேக்கிழார்

பெரியபுராணம்

திருநீலகண்ட நாயனார் புராணம்

திருப்பனந்தாள் மடம்

திருப்பனந்தாள்

7. டாக்டர் கோதைப்பிள்ளை

Forward , women and society Edited by Nirmala Jeyaraj

Lady Doak college

Madurai

8. க. கைலாசபதி

தமிழ் நாவல் இலக்கியம்

வானதி பதிப்பகம்

சென்னை

9. பேரா. செல்லப்பன்

தமிழ்விடுதலை இலக்கியம்

உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம்

சென்னை -600008

10. பாரதியார்

பாரதியார் கவிதைகள் தெர்குப்பு

கும்மிப்பாடல்கள்

வானதிபதிப்பகம்

சென்னை

11. பாரதிதாசன்

பாரதிதாசன் கவிதைத் தொகுப்பு

கைம்பெண் நிலை

பூம்புகார் பதிப்பகம்

சென்னை

12. மகாகவி தாகூர்

ரவீந்திரர் கட்டுரைத் திரட்டு

முதல்தொகுதி

சாகித்திய அகாடமி

சென்னை – 18

13. திருவள்ளுவர்

திருக்குறள்

கழக வெளியீடு

சைவசித்தாந்த நூல் பதிப்புக்கழகம்

# பின் இணைப்புகள்

## குறுநாவல்கள்

1. 1969 சாந்தா ஏன் அழுகிறாள்

2 1976 தனிமை

3 1977 சுறாமீன்கள்

4 1978 ராமனைப் போல் ஒரு பிள்ளை

5 1979 ஒரு அப்பாவும் இரண்டு பெண்களும்

6 1979 ஒரு பகல் ஒரு இரவு

7 1980 அம்மா

8 1980 தான் தன்சுகம்

9 1981 காளான்

10 1981 கோழைகள்

11 1982 மூக்கணாங்கயிறு

12 1982 அப்போதும் இப்போதும்

13 1983 ஓவர்டோஸ்

14 1983 கண்கெட்ட பின்

15 1983 கண்கெட்ட பின்

16 1984 இன்னொரு காரணம்

17 1984 தீர்வு

18 1985 ருசி கண்ட பூனை

19 1986 இரட்டை நாக்ககள்

20 1988 கிணற்று தவளைகள்

21 1988 பச்சோந்திகள்

22 1989 உயர்ந்தவர்கள்

23 1991 குட்டி

24 1993 காதல் என்பது எதுவரை?

25. 1972 திரிவேணி சங்கமம்

26. 1977 எ.ஃ.ப் பி.ஐ

27. 1978 தப்புக்கணக்கு

28. 1979 ஒரு சிங்கம் முயலாகிறது

29. 1979 துள்ள முடியாத புள்ளிமான்

30. 1980 அவர்களுக்குப் புரியாது

31. 1980 அவர்களுக்குப் புரியாது

32. 1981 பார்வை

33. 1981 கடைசியில்

34. 1982 விமோசனம்

35. 1982 காற்றுள்போதே

36. 1982 நட்பு

37. 1983 தகப்பன் சாமி

38. 1983 அடிமாடுகள்

| | |
|---|---|
| 39. | 1983 இதுவும் தாஜ்மகால்தான் |
| 40. | 1984 பயிரை மேயும் வேலிகள் |
| 41. | 1985 மண்குதிரைகள் |
| 42. | 1986 இனி தொடராது |
| 43. | 1987 அந்தம்மா ரொம்ப நல்லவங்க |
| 44. | 1988 விலை |
| 45. | 1988 ஏரிக்கடியில் சில கனவுகள் |
| 46. | 1990 முதல் கோணல் |
| 47. | 1992 இவர்களும் அவர்களும் |

**வாழ்க்கை வரலாறுகள்**

1. 1989 அப்பா
2. 1972 இந்திராவின் கதை

## பயணக்கட்டுரைகள்

1. 1971 புதுமையான அனுபவங்கள்
2. 1979 மனம் வாந்த மலேஷியா
3. 1987 பிரதமருடன் ஒரு பயணம் 2
4. 1990 புதுப்புது அனுபவங்கள்
5. 1995 ஆஹா அரபு நாடுகள்
6. 1997 மகாத்மா பறிந்த மண்ணில்
7. அனுபவங்கள் தொடருகின்றன
8. 1985 பிரதமருடன் ஒரு பயணம் -1
9. 1987 புதிய சுவடுகள்
10. 1991 ஹாங்காங் சீனா பாங்காக்
11. 1995 சொர்கக்ங்களில் சில நாட்கள்
12. 1997 ஒலோ, ஒலோ உலா

## கட்டுரைத் தொகுப்புகள்

1. 1976 என் செல்வங்கள்

2. 1984 சின்ன நூல்கண்டா நம்மைச் சிறைப்படுத்துவது

3. 1991 புதிய கோணங்கள்

4. 1992 உரத்த சிந்தனை

5. 1980 என் கண்ணோட்டத்தில்

6. 1986 சில அனுபவங்கள் சில மனிதர்கள்

7. 1991 கொஞ்சம் யோசிக்கலாமே

## சிறுகதை தொகுப்புகள்

1. 1973 உண்மைக்கதைகள்
2. 1980 டிரங்கால்
3. 1983 அணில்கள்
4. 1984 நட்பு
5. 1987 தெப்பக்குளம்
6. 1995 பட்டாம்பூச்சியும் தூக்கமும்
7. 1978 குழப்பங்கள்
8. 1980 கழுகு
9. 1984 புல்தடுக்கி பயில்வான்
10. 1986 அரவிந்தர் சொல்கிறார்
11. 1989 அவர்கள் பேசட்டும்

## குழந்தைகளுக்கான பேசும் புத்தகம்

1. 1996 அம்மா சொன்ன கதைகள் (புத்தகமும் ஒலிநாடாவும் இணைந்தது)

## இலக்கிய ஆய்வு

1. 1998 இலக்கியம் மூலம் இந்திய இணைப்பு பாகம் 1 – தெற்கு
2. 2000 இலக்கியம் மூலம் இந்திய இணைப்பு பாகம் 2 – தெற்கு
3. 2004 இலக்கியம் மூலம் இந்திய இணைப்பு பாகம் 3 – தெற்கு
4. 2009 இலக்கியம் மூலம் இந்திய இணைப்பு பாகம் 4 – தெற்கு

## சிவசங்கரிக்கு வழங்கப்பட்ட விருதுகள்

- ஆனந்த விகடன், கல்கி, அமுதசுரபி போன்ற பத்திரிக்கைகளில் வெளியான பல சிறுகதைகள் இலக்கியச்சிந்தனை போன்ற பல இலக்கிய அமைப்புகளின் பரிசுகளை வென்றுள்ளார்.

- இந்நூற்றாண்டின் மூன்று தலைமுறை நிகழ்ச்சிகளைச் சித்திரிக்கும் பாவங்கள் நாவல் கஸ்தூரி சீனிவாசன் விருதைப் பெற்றுள்ளது.

- சிந்தனையைத் தூண்டும் கட்டுரைகளைக் கொண்ட சின்ன நூல்கண்டா நம்மைச் சிறைப்படுத்தவது? தொகுப்பு மதிப்பு மிக்க ராஜா சர் அண்ணாமலைச் செட்டியார் பரிசைப் பெற்றுள்ளது.

- கலப்பு மணம் புரிந்த தம்பதியின் வாழ்வில் நிகழும் பிரச்சனைகளைப் பிரதிபலிக்கும் வேரில்லாத மரங்கள் நாவல், கல்கத்தாவின் பாரதீய பாஷா பரிஷத் அமைப்பின் பரிசைப் பெற்றுள்ளது.

- 1976ல் சென்னை ஜேசீப் அமைப்பினால் சிறந்த இளைஞர் விரது பெற்றவர்.

- For the Sake of Honour விருதுகளை தென்னிந்திய புத்தகப் பதிப்பாளர்கள் மற்றும் வெளியிட்டார்கள் சங்கம் சென்னை ரோட்டரி சங்கம் ஆகியவை வழங்கியுள்ளன.

- தமிழக காங்கிரஸ் கமிட்டியின் ராஜீவ் விருது தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் தமிழன்னை விருது அரிமா சங்கத்தினரின் மெல்வின் ஜோன்ஸ் விரது சென்னை தெலுங்கு ஆர்ட்ஸ் அகாடமி விருத இவையும் இவர் பெற்ற விருதுபட்டியல் அடங்கும்

- அறிவைத் தூண்டும் எழுத்தற்றலுக்குக்காக பாரத் எலகட்ரானிக் நிறுவனம் இவரை கௌரவித்தள்ளது.

- பெமீனா ஆங்கிலப் பத்திரிக்கையினால் 15.8.1997 சுதந்திரப் பொன்விழாவின்போது இந்தயாிவை உருவாக்கிய ஐம்பது பெண்மணிகளுக்குள் ஒருவர் என கௌரவிக்கபட்டுள்ளார்.

- அம்மா சொன்ன கதைகள் என்ற தலைப்பில் குழந்தைகளுக்கான ஆற கதைகளையும் அக்கதைகள் தன் குரல்களிலேயே வாசித்து ஒரு ஒலிநாடாவையும் இணைத்து சிவசங்கரி வெளியட்ட பேசும் புத்தகத்துக்கு 1998ன் சிறந்த சிறுவர் நூலுக்கான விருதை வழங்கியுள்ளது திருப்பூர் தமிழச் சங்கம்

- திருச்சியலுள்ள அனைத்து மகளிர் சங்கங்களும் இணைந்து சிந்தனைச் செல்வி என்ற விருதை மார்ச் 1998 ல் வழங்கியுள்ளது.

- பாரதீய வித்யா பவன் சென்னைக் கேத்திரமும் டைரக்டர் கே. சுப்பிரமணியம் நினைவு அறக்கட்டளையும் இணைந்து ஸ்தீரீ ரத்னா விருதை 8.3.1998 உலக மகளிர் தினத்தை முன்னிட்டு வழங்கின.

❖ பெங்களூரிலுள்ள அந்திமப்பே ∴ பவுன்டேசன் அமைப்பு தேசிய அளவில் சிற்நத பெண்மணியாக சிவசங்கரியைத் தேர்ந்தெடுத்து மனுஸ்ரீ விருதை ஏப்ரல் 1998ல் வழங்கியது.

❖ அமெரிக்காவின் டென்னஸ்ஸி மகாணத்திலுள்ள ஓக் ரிட்ஜ் நகரின் மேயர் 1999 ஜீலையில் ஓக் ரிட்ஸ் நகரின் கௌரவப் பிரஜை விருது வழங்கி கொளரவித்துள்ளார். சிவசங்கரி அவர்கள் இவ்விருதினைப் பெறும் தமிழரும் தமிழ் எழுத்தாளருமாவார்.

❖ சர்வதேச மகளிர் சங்கத்தின் 1998 ஆம் ஆண்டின் சிற்நத பெண்மணி விரது மார்ச் 2000ல் வழங்கப்பட்டது

❖ தொலைக்காட்சித் தொடர்களின் மூலம் சமுதாயப் பிரச்சனைகள் குறித்தான் விழிபுணர்வை ஏற்படுத்தி வருவதற்காக இவருக்கு 1999ம் ஆண்டிற்கான Roll of honour வழிருதினை அக்டோபர் 2000ல் வழங்கி கௌரவித்துள்ளது சென்னையிலுள்ள மயிலாப்பூர் அகாடமி.

❖ கல்கத்தாவிலிருந்து செயல்படும் ராஷ்ட்ரிய இந்தி அகாடமி பிரேம்சந்த் ராஷ்ட்ரிய சாஹித்ய சம்மான் என்ற விருதை அக்டோபர் 2001ல் வழங்கி கௌரவித்தது.

❖ சென்னையிலுள்ள வானவில் பண்பாட்டு மையம் டிசம்பர் 2002ல் பாரதி விருது அளித்து கௌரவித்துள்ளது.

❖ அகில இந்திய வானொலி நிலையம் இவரது வாழ்வைப்பற்றிய பேட்டியைத் தங்களது Archival programme நிகழ்ச்சிக்காகப் பதிவு செய்துள்ளது 2003 ஜனவரியில்.

❖ தஞ்சை இன்னர்வீல் சங்கம் நாயகி 2005 வீருது வழங்கி கௌரவித்துளளது 2005 மார்ச் மாதத்தில் நெய்வேலி நிலக்கரி நிறுவனம் நெய்வேலி புத்தக விழா சந்தர்பத்தில் இலக்கியப் பங்களிப்புக்கா கௌரவித்து 2005 ஜீலை மாத்தில்

❖ ரோட்டரி சங்கம் சென்னை கீழ்ப்பாக்கம் வாழ்நாள் சாதனை விருது வழங்கி கொளரவித்துள்ளது 2006 மார்ச் மாதத்தில்

❖ மும்மையிலுள்ள ஜீவிடி அர்ச்சனா டிரஸ்ட் அமைப்புடன் இணைந்து 2006ம் ஆண்ணடின் சிற்நத எழுத்தளாராக அங்கீகரித்து அஸ்திவத்வ விருதை வழங்கியுள்ளனர் ஆகஸ்ட் 2006 மாதத்தில்

❖ நல்லி திசை எட்டும் மொழிபெயர்ப்பு இலக்கிய விருது நான் நானாக நூலின் தெலுங்கு மொழிபெயர்ப்புக்கு அளிக்கப்ட்டு மூல ஆசிரியருக்கான விருதும் வழங்கப்பட்டது 2007 நவம்பரில்.

❖ ஆந்திர மாநிலத்தின் யுவகலாவாஹினி இலக்கிய கலைக்குழு கோபிசந்த் தேசிய விருது ஜனவரி 2008 வழங்கியது இந்திய மொழிகள் அணைத்திற்குமாக தேசிய விருதாக மாற்றப்பட்ட பிறகு முதல் விருதைப் பெறும் கௌரவம் இவருக்கு அளிக்கப்பட்டது.

- ❖ சென்னை கம்பன் கழகத்தின் சார்பில் பேராசிரியர் கே. சுவாமிநாதன் நினைவுப் பரிசில் வழங்கப்பட்டது 2009 ஆகஸ்ட் மாதத்தில்.

- ❖ சென்னை ஜஸ்டிஸ் பஷீர் அ1மத் கல்லூரி வாழ்நாள் சாதனையாளர்கள் விருது வழங்கி கொளரவித்து 2010 மாார்ச்சில்.

- ❖ மெகாடிவி பெண் சாதனையாளர் விருது வழங்கி கௌரவித்தது 2010 மார்ச்சில்.